# ஓஷோ

## சிந்தனைகளும் வரலாறும்



தமிழ்ப்பிரியன்



# ஓஷோ சிந்தனைகள்

குரு என்பவர் வரவேற்பவர், உபசரிப்பவர், விருந்தோம்புபவர். யாரையும் குரு மறுப்பது கிடையாது. உண்மையான குருமார்கள் யாரையுமே மறுக்க முடியாது. அவர்களால் இயலாது. அவர்கள் மனிதர்களை மறுக்க ஆரம்பித்தால் பிறகு இங்கு நம்பிக்கை என்பதற்கே வழி கிடையாது.

✧

ஒவ்வொருவரும் அறியாமை, உறக்கம், விழிப்புணர்வு அற்ற தன்மையில்தான் இருந்து கொண்டிருக் கிறார்கள். இப்படிப்பட்டவர்களுக்குத் தீட்சை, உபதேசம், பயிற்சி தேவைப்படுகிறது.

அறியாமை, உறக்கம், விழிப்புணர்வு இல்லாத தன்மையிலிருந்து விடுதலை பெற்று, அறிவு, பிரக்ஞை, விழிப்புணர்வு ஆகியவற்றுடன் இருக்கும் ஒருவருடைய உதவி இவர்களுக்கு கண்டிப்பாகத் தேவைப்படுகிறது. விழிப்புணர்வு மிக்க ஒரு மனிதனால், ஒரு கிரியா ஊக்கி போலச் செயல்பட முடியும்.

✧

ஒரு புத்திசாலித்தனமான, அறிவுக்கூர்மை நிறைந்த குழந்தைக்கு அதன் பெற்றோர்களிடமிருந்து மரியாதை கிடைக்காது. அறிவுக்கூர்மையான குழந்தைகளிடமிருந்து எப்போதும் ஏதாவது தொல்லையினை அனுபவித்துக் கொண்டிருப்பார்கள். ஏனென்றால், அக்குழந்தையின் கேள்விகளுக்கு அவர்களால் பதில் கூற முடியாது. காரணம் பதில் அவர்களுக்கும் தெரியாதுதான்.

தர்மசங்கடமான கேள்விகளை அவர்கள் சந்திக்க வேண்டி வரும். பெற்றோரின் பலவீனங்களை அவர்கள் காணக்கூடிய சந்தர்ப்பங்கள் உருவாகும். குழந்தைகளை அவர்களால் கட்டுப்படுத்த முடியாது.

✧

ஒவ்வொருவருமே ஒவ்வொருவரையும் கட்டுப் படுத்தவே விரும்புகிறார்கள். சுதந்திரத்தை அளிப்பதற்கு எவருமே முன் வருவதில்லை.

✧

உண்மையானது, சாரம் நிறைந்தது, உத்தரவாதம் மிகுந்தது. மறுக்கப்படுகின்றது.

பொய்யானது, போலியானது, சாரமற்றது. மிகவும் உயர்வாகப் போற்றப்படுகிறது.

✧

அறிவுக்கூர்மை நிறைந்த மக்களை உங்களால் பொறுத்துக் கொள்ள முடியாது. ஏற்றுக் கொள்ள முடியாது. அறிவுக்கூர்மை நிறைந்த மக்களிடம் நீங்கள் அதிகாரத்தைக் கொடுக்கமாட்டீர்கள்.

ஏனென்றால், அவர்களைப் பார்த்து நீங்கள் பயப்படு கிறீர்கள். சில பல முட்டாள்தனமான மக்களை மட்டுமே உங்கள்மீது ஆதிக்கம் செலுத்த நீங்கள் அனுமதிக்கிறீர்கள். ஏனெனில், முட்டாள்தனமான மக்களுக்கும் உங்களுக்கும் இடையே எப்போதுமே நிறைய ஒற்றுமைகள், உடன் பாடான விஷயங்கள் இருக்கின்றன.

✧

குழந்தையைப்போல உள்ளவர்கள் மட்டுமே எல்லா வற்றையும் கண்டு அதிசயப்படுவார்கள். அதிசயப்படு பவர்கள் மட்டுமே அனுபவப்படும் அதிசயம்தான் வாழ்க் கையின் மிகப் பெரிய பொக்கிஷம். நீங்கள் அதிசயிக்கின்ற ஆற்றலை இழந்துவிட்டால் நீங்கள் உங்களுடைய வாழ்க் கையை இழந்துவிட்டீர்கள். அறிவு, அதிசயப்படுவதைக் கொன்று விடுகிறது.

✧

சந்தேகத்தினால் வளர்வது விஞ்ஞானமாகும். அதிசயத்தால் வளர்வது மதமாகும். இவைகளுக்கு இடையே இருப்பது தத்துவமாகும்.

சில சமயங்களில் தத்துவவாதி சந்தேகப்படுகிறார். அல்லது அதிசயிக்கிறார். சந்தேகம் அதிகமானால் மெல்ல மெல்ல விஞ்ஞானியாகி விடுகிறார். அதிசயிக்கும் தன்மை அவரிடம் அதிகமாக இருந்தால் அவர் மதத்தன்மையுடை யவராக ஆகி விடுகிறார்.

இதனால்தான் தத்துவம் உலகிலிருந்து மறைந்து கொண்டிருக்கிறது. 99% தத்துவவாதிகள், விஞ்ஞானி களாகிவிட்டார்கள்.

✧

*அறிவுக்கூர்மை நிறைந்த மக்கள் தங்களுடைய வாக்குறுதிகளைப் பல சமயங்களில் மீறுவதைத் தவிர்க்க முடியாது. ஏனென்றால், வாழ்க்கை மாறிக் கொண்டிருக் கிறது. சூழ்நிலைகள் மாறிக் கொண்டே இருக்கின்றன.*

✧

*ஒரு காதல் தொடர்பு மிகவும் விழிப்புணர்வுடன் இல்லையென்றால் அது மிகுந்த துன்பத்தையும், பிரச் சனையையும் உண்டுபண்ணும். காதலர்கள் அனைவரும் பிரச்சனையில் இருக்கிறார்கள்.*

✧

*ஒரு போதும் சந்திக்கவே செய்யாத காதலர்கள்தான் மிகவும் மகிழ்ச்சியானவர்கள்.*

✧

*பெண்மையின் அணுகுமுறையும், ஆண்மையின் அணுகுமுறையும் ஒன்றுக்கொன்று மிகவும் எதிர்மறை யானவை. ஒரு உணர்வுள்ள முயற்சி செய்யப்பட்டால் ஒழிய, அது உங்கள் தியானமாக ஆனால் ஒழிய, ஒரு அமைதியான வாழ்வு வாழ்வதற்கான நம்பிக்கை கிடையாது.*

✧

*உங்களது தியானம் ஆழமாக ஆக ஆக, உங்களது அன்பும் ஆழமாகும். அன்பு ஆழமாகும்பொழுது தியானம் ஆழமாகும். உங்கள் தியானம் மலரும்பொழுது உங்கள் அன்பும் மலரும்.*

✧

*அன்பு குருட்டுத்தனமானது. தியானம் அதற்குக் கண்களைத் தருகிறது. தியானம் அதற்குப் புரிதலைத் தருகிறது. உங்கள் அன்பு தியானமும் அன்பும் சேர்ந்ததாக*

இருக்கும்பொழுது நீங்கள் இணைந்து பயணம் செய்பவர் களாகிறீர்கள்.

அப்போது அது ஒரு கணவனுக்கும் மனைவிக்கும் இடையிலான ஒரு சாதாரண உறவாக இருக்காது. வாழ்க்கையின் இரகசியங்களைக் கண்டுபிடிப்பதற்கான பாதையில் அது ஒரு நட்பாக மலரும்.

✧

தியானமில்லாமல் அன்பு நிச்சயமாகத் தோல்வி யடையும்; அது வெற்றி பெறுவதற்கான சாத்தியப்பாடே கிடையாது.

✧

உலகிலுள்ள முரண்பாடுகள் எல்லாமே தவறாகப் புரிந்து கொள்வதனால்தான் ஏற்படுகின்றன.

✧

நீங்கள் என்மீது முழுமையாக அன்பு செலுத்தலாம். ஏனெனில், என்னுடன் உங்கள் உறவு தியான ரீதியானது. வேறு எந்த ஆணுடனோ அல்லது பெண்ணுடனோ, நீங்கள் இணக்கத்துடன் வாழ வேண்டுமானால் நீங்கள் இங்கே கொண்டு வந்துள்ள அதே சூழ்நிலையை, அதே சுற்றுச் சூழலை நீங்கள் அங்கே கொண்டு வரவேண்டும்.

✧

மருந்து உங்கள் உடலைக் குணப்படுத்துகிறது. தியானம் உங்கள் ஆன்மாவைக் குணப்படுத்துகிறது. மருந்து உங்களின் பௌதிகப் பகுதியைக் குணப்படுத்து கிறது. தியானம் உங்கள் ஆத்மிகப் பகுதியைக் குணப்படுத்துகிறது.

✧

மனிதர்கள் ஒன்றாக வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். அவர்களது உள்ளங்கள் மிகுந்த காயங்களுடன் காணப்படு கின்றன. எனவே, மிகச் சிறிய விஷயங்களும் அவர்களை வருத்தத்திற்குள்ளாக்குகின்றன.

✧

மனிதர்கள் புரிந்து கொள்ளுதலின்றி வாழ்கின்றனர். எனவே, அவர்கள் என்ன செய்தாலும் அது ஆபத்தில் சென்று முடிகிறது.

✧

நீங்கள் ஒரு ஆணை நேசித்தால், தியானம் என்பது நீங்கள் அவனுக்குக் கொடுக்கக் கூடிய ஒரு சிறந்த பரிசாகும். நீங்கள் ஒரு பெண்ணை நேசித்தால், கோஹினூர் வைரம் கூட ஒன்றுமில்லாமல் போகும். தியானம், அதைவிட வெகு விலைமதிப்பான பரிசாக அமையும். அது உங்கள் வாழ்க்கையை மகிழ்ச்சிகரமானதாக்கும்.

✧

என்னைப் பொறுத்த வரையில், ஆணும் பெண்ணும் ஒரு முழுமையின் இரண்டு பாதிகளாக இருப்பது போன்றதுதான் அன்பும் தியானமும்.

தியானம் ஆண்; அன்பு பெண்.

✧

எனது பணியே எல்லாவிதமான மனிதர்களையும் ஏற்றுக் கொள்வதுதான். போலி வேடதாரிகள், எல்லா விதமான முகமூடிகளையும் அணிந்து கொண்டிருப் பவர்கள், உண்மையற்றவர்கள், தமது சொந்தப் புத்தி சாலித்தனத்திற்குக் கீழ்ப்படிபவர்கள்... ஆனால், இந்த

மனிதர்களுக்குத்தான் நான் தேவையாக இருக்கிறேன். மேலும் இந்த மனிதர்கள்தான் எனக்கும் தேவை.

✧

பிறப்பது என்பது ஒரு விஷயம். வாழ்க்கையின் கலையை அறிந்திருப்பது என்பதும், முழுமையாக வாழ்வது என்பதும் முற்றிலும் மாறுபட்ட ஒரு விஷயம்.

✧

ஒரு மனிதன் உருவாக்குபவனாக இருந்தால் ஒழிய, வாழ்க்கையில் அவனால் அதிக மகிழ்ச்சிகளைக் காண இயலாது.

✧

நீங்கள் என்ன செய்தாலும் அதில் உங்கள் தனித் தன்மையை வெளிப்படுத்துங்கள்.

✧

உங்கள் வாழ்க்கையை உருவாக்குங்கள். ஏன் சலிப்புடன் இருக்கிறீர்கள் என்று கண்டுபிடியுங்கள். மாற்றுங்கள்.

✧

இது ஒரு மிகக் குறுகிய வாழ்க்கை. சவால்களைச் சந்தியுங்கள், சூதாட்டக்காரரக இருங்கள். நீங்கள் என்ன இழந்துவிட முடியும்?

நாம் வெறும் கரங்களுடன் வருகிறோம். வெறும் கரங்களுடன் போகிறோம். இழப்பதற்கு இங்கு ஒன்று மில்லை.

✧

எந்தப் பிரச்சனையும் முக்கியத்துவம் வாய்ந்ததல்ல. எல்லாப் பிரச்சனைகளும் உங்களுக்கும் உயிர் வாழ்தலுக்கும் இடையில் உள்ள தடைகளே.

✧

நம்பிக்கை என்பதற்குத் தனக்கே உரிய மனோதத்துவம் உள்ளது. நிறைய மனிதர்கள் உங்களை நம்புகிறார்கள் என்றால், நீங்கள் நிச்சயமாக உங்களையே நம்புவீர்கள்.

✧

நீங்கள் விழிப்புணர்வு இல்லாமல் இருக்கும்போது உங்களுடைய மனத்தில் குழப்பங்கள், கோளாறுகள், குளறுபடிகள் உங்கள்மீது ஆதிக்கம் செலுத்துகின்றன. ஆனால், நீங்கள் விழிப்புணர்வு பெற்றதும் அவை யாவும் மறைந்து விடுகின்றன.

✧

நீங்கள் யார்மீதும் ஆதிக்கம் செலுத்த முயலாதீர்கள். அதைப் போலவே உங்களை மற்றவர்கள் ஆதிக்கம் செலுத்த அனுமதிக்காதீர்கள்.

✧

வருத்தமாக இருக்கின்றீர்களா? நடனம் ஆடுங்கள். அல்லது ஷவரின் அடியில் நின்று குளியுங்கள். உடலின் சூடு மறைவது போல, உங்களுடைய துக்கமும் காணாமல் போய்விடும்.

✧

ஏதாவது வெற்றி கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தில் வாழும் மனிதன் எப்பொழுதும் அமைதியாக இருக்கமாட்டான்.

✧

இந்தக் கணத்தில் நீங்கள் மகிழ்ச்சியோடு இருந்தால் வருகின்ற கணப்பொழுதை மிகவும் ஆழமாக அனுபவிப் பவராக இருப்பீர்கள்.

✧

"நான் பல பாவங்களைச் செய்து வருகிறேன்" என்ற குற்ற உணர்வினை விட்டுவிட வேண்டும். இப்படிப்பட்ட எண்ணம் உனக்குள்ளே குற்ற உணர்வுகளை உருவாக்கிக் கொண்டிருக்கும்.

✧

ஒன்றை நீங்கள் நன்றாக ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். எந்த ஒரு மனிதனுக்குத் தன் மீது சுயமரியாதை இருக்கிறதோ அந்த மனிதன்தான் மற்றவர்களுக்கு மரியாதை அளிக்க முடியும்.

✧

மக்கள் வதந்திகளை மிகவும் எளிதாக நம்பி விடுகிறார்கள். ஒரு நபரைப் பற்றி யாராவது ஒருவர் தவறாக, மோசமாக, கௌரவக் குறைவாக, அவதூறாக, அசிங்கமாக எதையாவது கூறினால் நீங்கள் உடனடியாக அதனை நம்பி விடுகிறீர்கள்.

ஆனால், ஒரு நபரைப் பற்றி யாராவது மேன்மையாக, உயர்வாக, உன்னதமாக, புகழ்ச்சியாகக் கூறினால் நீங்கள் அதை நம்புவதற்குத் தயாராக இல்லை. அதற்கு நீங்கள் அத்தாட்சிகளைக் கேட்கின்றீர்கள்.

✧

தைரியமாக இரு என்று கூறுவது முட்டாள்தனமானது. ஒரு புத்திசாலியான மனிதன் பயத்தைத் தவிர்க்க முடியாது. நீங்கள் முட்டாளாக இருந்தால் உங்களுக்குப் பயம் இருக்காது.

✧

ஒரு மனிதன் தன் பயங்களை ஏற்றுக் கொள்ளும்போது பயமற்றவனாக மாறுகிறான்.

✧

கட்டுப்படுத்தப்பட்ட மனிதர்கள் எப்போதும் பயந்து கொண்டே இருப்பார்கள். ஏனெனில், அவர்களுடைய ஆழத்தில் குழப்பம் மறைந்துள்ளது.

நீங்கள் கட்டுப்பாடு இல்லாதவராக உயிரோட்டத்துடன் இருக்கும்போது பயப்படமாட்டீர்கள். பயம் என்ற கேள்விக்கே இடம் இல்லை.

✧

தியானப் பாதையில் செல்பவன் சலனங்களிலிருந்து விடுபட்ட கட்டத்தை வந்தடைகிறான். சலனம் வெளியி லிருந்து வருவதில்லை. அடக்கி வைக்கப்பட்ட ஆசை, அடக்கி வைக்கப்பட்ட சக்தி, அடக்கி வைக்கப்பட்ட கோபம், அடக்கி வைக்கப்பட்ட பாலுணர்வு, அடக்கிவிடப்பட்ட மனமே சாத்தானாக ஆகி உங்களைப் பழிவாங்குகிறது.

✧

பிரம்மச்சரிய விரதம் இருப்பவர்கள் மிகுந்த காமுகர் களாக இருப்பார்கள். மனம் ஒரு முனையிலிருந்து மற்றொரு முனைக்கு எளிதாகச் சென்று விடுகிறது.

என்னுடைய கணிப்பு, யார் ஒருவர் உணவுமீது அதிக விருப்பம் உடையவராக இருக்கிறாரோ அவர் ஒரு நாள் உண்ணாவிரதத்தின்மீது அதிக விருப்பமுடையவராக ஆகி விடுவார்.

✧

பாசாங்கு செய்ய முயற்சிக்காதீர்கள். புரிந்து கொள்ளுங்கள். பாசாங்கு செய்து மற்றவர்களை நம்பும்படிச் செய்யாதீர்கள். ஏனெனில், இந்த ஏமாற்று வேலையில் உங்களைத் தவிர வேறு யாரும் நஷ்டப்படப் போவதில்லை.

✧

தியானம் என்றால் விழிப்புணர்வு ஆகும்.

✧

கருணை நிறைந்த மனிதன் எப்போதும் மற்றவர்களைப் பற்றியும் அவர்களுடைய தேவையைப் பற்றியும்தான் எண்ணிக் கொண்டிருப்பான்.

✧

அன்பு எப்போதும் மற்றவர்களைப் பற்றியே நினைக்கிறது. அன்பு தன்னை மற்றவர்கள் பயன்படுத்திக் கொள்ளத் தயாராக இருக்கிறது. அன்பு சேவை செய்யத் தயாராக இருக்கிறது.

✧

நீங்கள் தியானத்திற்குள் நுழைந்தால் கருணையும் அன்பும் தானாக வரும். இவை தியானத்தை நிழல்போலத் தொடருகின்றன.

✧

இவ்வுலகம் எப்படி இருக்கிறதோ அதை அப்படியே ஏற்றுக் கொள்ளுங்கள்.

✧

உலக வாழ்க்கையில் நீங்கள் கற்றுக் கொண்டிருக்கும் தத்துவம் நீங்கள் பைத்தியம் பிடித்துப் போகும் அளவுக்கு உங்களைத் துரத்துகிறது.

பணம், பதவி, அதிகாரம், பெயர், புகழ் ஆகியவற்றைத் தேடி அடைய வேண்டுமென்பது பகுத்தறிவிற்குப் பொருத் தமாக இருக்கிறது. ஆனால், அது ஞானவிழிப்புக்குப் பொருந்தாது.

✧

சிரிப்பு என்பது சிறப்புத் தன்மை கொண்டது. சிரிப்பு, கடவுளால் கொடுக்கப்பட்ட ஒரு பரிசு, நன்கொடை. ஞானவிழிப்பு அடையும்போது மனிதனால் முழுமையான சிரிப்பை அனுபவிக்க முடிகிறது.

✧

நகைச்சுவை உணர்வு என்பது முழு மனித குலத்திற்கே ஒரு அங்கமாக இருக்கின்றது. அது ஆரோக்கியமாக, இளமையாக வைத்துக் கொள்ள உதவுகிறது.

✧

சிரிப்பு என்பது பிரார்த்தனையைவிட மிகவும் புனித மானது. ஏனெனில், முட்டாள்கூட பிரார்த்தனை செய்யலாம். அதற்கு அதிகமான புத்திசாலித்தனம் தேவையில்லை. ஆனால், சிரிப்பதற்குப் புத்திசாலித்தனம் தேவைப் படுகிறது.

✧

மனத்தை ஒரு முகப்படுத்துவது என்பது தியானம் அல்ல. தியானம் என்பது விழிப்புணர்வுதான். நீங்கள் அமைதியாக உட்கார்ந்து உங்கள் மூச்சை கவனியுங்கள். ஒரு சாட்சியாக நின்று கவனியுங்கள். அப்படிப் பார்க்கும் பொழுது நீங்கள் எதையும் ஒதுக்கவில்லை.

கார் சப்தமிடுகிறது. மிகவும் சரி. அதை அப்படியே ஏற்றுக் கொள்ளுங்கள். கார் செல்லும்போது பலவித குறுக்கீடுகள் வருகின்றன. அதை நீங்கள் சந்தித்துதான் ஆக வேண்டும். அப்படியே ஏற்றுக் கொள்ளுங்கள். எதையும் தள்ள வேண்டாம். எல்லாவற்றிலும் ஒரு விழிப்புணர்வைக் கொண்டு வாருங்கள்.

✧

முழுமையாக இருக்கும் எதற்குமே அதற்கான ஒரு தனி அழகு உண்டு.

✧

கடவுள் ஒரு நபராக இருப்பதாக நான் நம்பவில்லை. எனவே, என்னையோ அல்லது வேறொருவரையோ ஆசீர்வதிக்கக் கூடிய ஒரு நபராக எந்தக் கடவுளும் இங்கே இருக்கவில்லை.

கடவுள் உணரப்பட வேண்டிய ஒரு ஞானம் மட்டுமே. கடவுள் எதிர்கொள்ளப்பட வேண்டிய ஒரு நபர் அல்லர். முழுமைப்படுத்தப்பட்ட உங்களின் விழிப்புணர்வுதான் கடவுள்.

மேலும் யாரேனும் ஒரு கடவுள் இங்கே இருப்பதாக நான் நம்பவில்லை. நானும் எல்லா மூலை முடுக்குகளிலும் தேடிப் பார்த்துவிட்டேன். கடவுள் அகப்படவில்லை. அறியாமையில் மூழ்கிக் கிடக்கும் மக்களின் மனங்களில்

மட்டுமே கடவுள் இருக்கிறார். நான் ஒரு நாத்திகன் அல்லன். ஞாபகம் வையுங்கள். அதே சமயம் நான் ஓர் ஆத்திகனும் அல்லன்.

✧

கடவுள் ஒரு நபர் அல்லர். கடவுள் ஓர் இருப்பு மட்டுமே. உங்களுடைய தியானத்தில் நீங்கள் மிக உயர்ந்த நிலையை அடையும்போது அந்த இருப்பை நீங்கள் உணர முடியும். இந்தப் படைப்பு முழுவதுமே ஒரு கடவுள் தன்மை பொங்கிப் பெருகி நிரம்பி வழிவதாக நீங்கள் உணர்வீர்கள். இங்கே, கடவுள்தன்மை இருக்கிறது. கடவுளைப் பற்றிய என்னுடைய கண்ணோட்டம் இதுதான்.

✧

கடவுள் தன்மை ஒரு மலரின் நறுமணத்தைப் போன்றது. கடவுள் தன்மை என்பது முழுமையான சுதந் திரமும், முழுமையான ஆனந்தமும் நிறைந்த ஓர் அனுபவமாகும்.

✧

கடவுள் எல்லா இடங்களிலும் இருக்கிறார். ஒரு குறிப்பிட்ட வழியில் கடவுளைத் தேடுவது, அவரைத் தவறவிட்டு விடுவதற்கான உறுதியான செயலாகும்.

கடவுள் எங்கோ இருக்கவில்லை. கடவுள் இங்கே இருக்கிறார். கடவுள் உங்களைச் சூழ்ந்திருக்கிறார். உங்களைச் சூழ்ந்திருக்கும் அனைத்தும் கடவுள்தான். அவரைத்தான் நீங்கள் சுவாசிக்கிறீர்கள். அவரைத்தான் நீங்கள் உண்கிறீர்கள். அவரைத்தான் நீங்கள் அருந்துகிறீர்கள். அவரிடம்தான் நீங்கள் காதல் கொள்கிறீர்கள்.

✧

கடவுள் என்னும் வார்த்தை கடவுள் அன்று. கடவுளின் உருவங்கள் கடவுள் அன்று. கடவுளைப் பற்றிய விளக்கங்கள் யாவும் மனிதனால் உருவாக்கப்பட்டவை. மனித மனத்தினால் தயாரிக்கப்பட்டவை.

✧

கடவுளைச் சுட்டிக்காட்ட முடியாது. ஏனென்றால், நீங்கள் எதைச் சுட்டிக்காட்டினாலும் அது ஒரு பகுதியாகத்தான் இருக்கும். முழுமைத் தன்மைதான் கடவுள்.

கடவுளை நீங்கள் பார்க்க முடியாது. ஏனென்றால், நீங்கள் எதைப் பார்த்தாலும் அது ஒரு பகுதியாகத்தான் இருக்கும். இதை நீங்கள் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும்.

✧

நீங்கள் மாற வேண்டாம். நீங்கள் எப்படி இருக்கிறீர்களோ அப்படியே நீங்கள் நிறைவாக இருக்கிறீர்கள். உங்கள் குறைகள் அனைத்துடனும் நீங்கள் நிறைவாக இருக்கிறீர்கள். உங்கள் எல்லைகள் அனைத்துடனும் எல்லையற்றவராக இருக்கிறீர்கள். உங்களைப் பற்றிக் கடவுள் நிறைவாக இருக்கிறார். மகிழ்ச்சியாக இருக்கிறார்.

✧

நீங்கள் மாற வேண்டும் என்று கடவுள் விரும்பவில்லை. நீங்கள் எப்படி இருக்கிறீர்களோ அதுதான் கடவுளுக்குத் தேவையானது. கடவுள் உங்களை வரவேற்று ஏற்றுக் கொள்கிறார்.

✧

*சன்னியாசி என்பவர்,*

1. *எதிர்காலத்தைப் பற்றிக் கவலைப்படாதவர்.*
2. *இந்தக் கணத்தில் எவ்வளவு முழுமையாக வாழ முடிகிறதோ அவ்வளவு முழுமையாக வாழ்பவர்.*
3. *இந்தக் கணத்தில் எந்தவிதக் குற்ற உணர்வும் இல்லாமல் ஆனந்தத்தை அனுபவிப்பவர்.*
4. *பற்றாக்குறை என்ற உணர்வில்லாமல் ஆனந்தத்தை அனுபவிப்பவர்.*

✧

ஒருவர் அதிசயம் நிறைந்தவராக, அற்புதம் நிறைந் தவராக இருக்கும்போது போற்றுதல் ஏற்படுகின்றது. போற்றுதல்தான் பிரார்த்தனையாகின்றது. உங்களுடைய போற்றுதலில் பிரார்த்தனை எழுகிறது.

✧

உங்கள் அறிவு உங்களைக் கட்டுப்படுத்தாமலும், உங்களுக் கென்று ஒரு குணத்தை உருவாக்காமலும் பார்த்துக்கொள்ளுங்கள்.

✧

குணம் என்பது ஒரு கவசம் போன்றது. கவசத்தினால் சிறையிடப்பட்டவராக ஆகி விடுகின்றீர்கள். குணம் என்பது ஒரு சவக்குழி.

✧

அறிந்து கொள்ளுவதை அனுமதியுங்கள். அது அறிவாக ஆவதற்கு அனுமதிக்காதீர்கள். அதை அப்படியே மறந்துவிடுங்கள். முன்னேறிச் செல்லுங்கள்.

✧

நீங்கள் ஒரு குழந்தையைப்போல மாறுங்கள். இது சிரமமானதுதான். ஆனால், இந்த வழியில் செல்வது கடினமானதுதான். இந்த வழியில் சென்றால் உண்மையை அடைந்துவிடலாம். உள்ளுணர்வை அடைந்துவிடலாம். நீங்கள் பேரானந்தத்தை அடைந்துவிடலாம்.

✧

நீங்கள் எதையும் உங்களிடம் வைத்துக் கொள்ளாமல் உங்களிடமுள்ள எல்லாவற்றையும் முழுமையாகக் கொடுக்கும் பொழுது, எல்லாவற்றையும் தியாகம் செய்து முழுமையாகச் சரணடையும்போதுதான் உங்களுக்கு வெற்றி கிட்டும்.

✧

அடைக்கலம் புகுதல் என்பது நன்மையோ, தீமையோ எது நிகழ்ந்தாலும் அதனதனை அதனதன் போக்கிலேயே விட்டுவிடுதல் என்பதே ஆகும்.

✧

உனது இதய மனிதனை விழித்தெழச் செய்து கொண்டு மூழ்கி விடு. அந்தப் புதிய கதிரவன் உதிக்க உதவுபவனாய் அக்கதிரொளியில் மூழ்கி விடு.

இந்த மூழ்குதலால் நீ ஒன்றையும் (புதிதாக) இழக்கப் போவதில்லை. வீணாகப் போராடதே! எல்லாமும் ஒரு நாள் உன்னை விட்டு நீங்க வேண்டியவையே ஆகும். நீ விரும்பினாலும், விரும்பாவிட்டாலும் ஒரு நாள் நீ மூழ்க வேண்டியதுதான்.

✧

ஓர் ஆசை மற்றொரு ஆசையை உருவாக்குகிறது. ஆசை முடிவில்லாததாக இருக்கிறது.

✧

மனம் என்னும் மரத்தின் ஆணிவேராக இருக்கும் ஒரே ஒரு வேரை வெட்டிவிடுங்கள். அந்த வேர்தான் ஆசை என்றழைக்கப்படுகிறது.

✧

புரிந்து கொள்ள எந்த முயற்சியும் செய்யாதீர்கள். அமைதியாகக் கேளுங்கள். எந்தவிதமான நோக்கமும் இல்லாமல் நான் எப்படி பேசிக் கொண்டிருக்கிறேனோ இதைப் போலவே உங்கள் பங்குக்கு எந்தவிதமான நோக்கமும் இல்லாமல் நீங்கள் கேளுங்கள்.

அதன் பிறகு சந்திப்பு கண்டிப்பாக நிகழ்ந்தே தீரும். நானும் நோக்கமில்லாமல் இருக்கிறேன். நீங்களும் நோக்கமில்லாமல் இருக்கிறீர்கள். இங்கே இத்தகைய சந்திப்புக்கு எது இடையூறு விளைவிக்க முடியும்? எது தடைவிதிக்க முடியும்? இதன் பிறகுதான் சந்திப்பும், சங்கமமும் நிகழும். இதில் ஒளி இருக்கும், தெளிவு இருக்கும், பிரகாசம் இருக்கும்.

✧

தாமரை இலையிலிருந்து ஒரு பனித்துளி சமுத்திரத்துக்குள் விழும்போது அது தன்னை சமுத்திரத்தின் ஓர் அங்கம் என்று பார்ப்பதில்லை. அது தன்னைத்தானே சமுத்திரம் என்று பார்க்கிறது.

இதைக் கண்டு கொள்வதுதான் மிக உயர்ந்த இலக்கு, குறிக்கோள், சாதனை, இலட்சியம், மிகப் பெரிய ஞானம். இதற்கு அப்பால் வேறு எதுவும் கிடையாது.

✧

மனித உடல் அழிவற்றது. நிச்சயமாக இது உண்மை. ஏனெனில், மனித உடலில் உள்ள மூலகங்கள் எல்லாம் இயற்கைக்குள் மறைந்து போகின்றன. எதுவுமே இறக்கப் போவதில்லை. எல்லாமே கலந்து போகப் போகிறது.

மண் மண்ணோடு, தண்ணீர் தண்ணீரோடு, காற்று காற்றோடு... எல்லா மூலகங்களும் தமது ஆரம்பப் பொருளோடு சேர்ந்து விடுகின்றன. அந்த அர்த்தத்தில் மனித உடல் அழிவற்றது. மனித உடல் மட்டுமல்ல, எருமைகள், கழுதைகள், குரங்குகள் எல்லாமே அழிவற்றவை.

✧

ஞானத்திற்கு அப்பால் செல்வது என்பது ஒரு சாதாரண மனிதராக ஆவதுதான். ஞானத்தைப்பற்றி எல்லாவற்றையும் மறந்துவிட்டு, ஆன்மிக இலட்சியங்களை எல்லாம் மறந்துவிட்டு, சாதாரணமாக மகிழ்ச்சியோடு, விளையாட்டுத்தனத்தோடு வாழ்வதுதான். இந்தச் சாதாரண தன்மைதான் உலகத்திலேயே மிக அசாதாரணமான ஒன்றாகும்.

✧

ஐயுறவு (சந்தேகம்) கொள்ளும் ஒரு மனம் உலகிலேயே மிக அழகான ஒன்று.

அது மதங்களால் வெறுத்து ஒதுக்கப்பட்டு வந்துள்ளது. ஏனெனில், மதங்களால் ஐயுறவுக் கேள்விகளுக்குப் பதில்

அளிக்க முடியவில்லை. அவர்கள் நம்பிக்கை கொண்டவர் களை மட்டுமே விரும்பினார்கள்.

ஐயுறவு மனம் என்பது நம்பிக்கை கொண்டவருக்கு நேர் எதிர்மறையானது.

நான் ஐயறவு மனதைப் பெரிதும் ஆதரிக்கின்றேன். நீங்கள் அனுபவித்து உணர்ந்தால் ஒழிய எதையும் நம்பா தீர்கள். எதையுமே நம்பாதீர்கள். தொடர்ந்து, அது எத்தனை காலம் பிடித்தாலும், கேள்வி கேளுங்கள்.

உண்மை மலிவானது அல்ல. அது நம்பிக்கை கொள்ப வருக்குக் கிடைப்பதில்லை. ஐயுறவு கொள்பவர்களுக்கு மட்டுமே அது கிடைக்கிறது.

ஒன்றை மட்டும் நினைவில் கொள்ளுங்கள்: அரை மனதாக ஐயுறவு கொள்ளாதீர்கள். ஒரு முழுமையான ஐயுறவுவாதியாக இருங்கள்.

ஒரு முழுமையான ஐயுறவுவாதியாக இருங்கள் என்று நான் சொல்லும்பொழுது, உங்களது ஐயுறவுக் கருத்துகளும், மற்றவரின் நம்பிக்கையைப்போல அதே சோதனைகளுக்கு உள்ளாக வேண்டும். ஐயுறவு என்பது முழுமையாக உள்ளபோது, அது தன்னைத்தானே எரித்துக் கொள்கிறது. ஏனெனில், நீங்கள் உங்கள் ஐயுறவையும் கூடக் கேள்விகள் கேட்டுச் சந்தேகிக்க வேண்டும்.

உங்களது ஐயுறவை நீங்கள் சந்தேகிக்காமல் விட்டுவிட முடியாது. இல்லாவிட்டால், உங்கள் நிலைப்பாடு நம்பிக்கை கொள்பவரின் நிலைப்பாடு ஆகிவிடும்.

உங்களுக்குள் உள்ள ஐயுறவுவாதியை நீங்கள் சந்தேகிக்கும்பொழுது ஞானி வெகுதூரத்தில் இல்லை.

✧

*வாழ்க்கை ஒரு மர்மம், கேள்வி அல்ல. அது தீர்க்கப் படுவதற்கான ஒரு புதிர் அல்ல, பதிலளிக்கப்பட வேண்டிய ஒரு கேள்வி அல்ல. ஆனால், வாழப்பட வேண்டிய ஒரு மர்மம், நேசிக்கப்பட வேண்டிய ஒரு மர்மம், நடனமாடப் பட வேண்டிய ஒரு மர்மம்.*

✧

*ஒரு முழுமையான ஐயுறவு மனம் நிச்சயமாக ஒரு ஞானி ஆகும். எனவே, எனது கதவுகள் எல்லோருக்கும் திறந்துள்ளன. நான் ஐயுறவுவாதியை ஏற்றுக் கொள்கிறேன். ஏனெனில், அவரை எப்படி ஞானியாக மாற்றுவது என்று எனக்குத் தெரியும்.*

*நான் ஒரு மதவாதியை வரவேற்கிறேன். ஏனெனில், அவனது மதவாதத்தை எவ்வாறு அழிப்பது என்று எனக்குத் தெரியும். நான் கடவுளை நம்பாதவனை வரவேற்கிறேன். ஏனெனில் அவனது அவநம்பிக்கையை எப்படி மாற்றுவது என்று எனக்குத் தெரியும்.*

*எனது கதவுகள் யாரையும் தடுப்பவை அல்ல. ஏனெனில் நான் உங்களுக்கு ஒரு வழிமுறையை மட்டுமே கொடுக்கிறேன். உண்மை விஷயம் என்ன என்று நீங்களே கண்டு கொள்வதற்கான ஒரு தியானத்தைக் கொடுக்கிறேன்.*

✧

*மிகச் சிறந்த தத்துவ ஞானிகள் கூட சிறு பிள்ளை களைப் போல நடந்து கொண்டிருக்கிறார்கள். அவர்கள் தொடர்ந்து வாழ்க்கை ஒரு புதிர், ஒரு குறுக்கெழுத்துப் புதிர் என்பதுபோல நடந்து கொண்டிருக்கிறார்கள்.*

அது ஒரு புதிர் அல்ல. அது வெறுமனே பதிலளிக்க முடியாது. ஆனால் அனுபவிக்கத்தக்க ஒரு தன்மை. இதைத்தான் நான் இறைஞானம் என்கிறேன்.

✧

ஞானத்திற்கு அப்பால் செல்வது என்று நான் சொல்லும் பொழுது நான் இதையேதான் வேறு வார்த்தைகளில் சொல்கிறேன். கேள்வி - பதில் விளையாட்டைத் தாண்டிச் செல்வது - இருக்கின்ற உண்மையை அது எதுவாக இருந்தாலும், அப்படியே ஏற்றுக் கொள்வது.

இல்லாவிட்டால் - அங்கே பிரச்சனைகளுக்கு மேல் பிரச்சனைகள் எழுகின்றன. முதலில் நீங்கள் கேள்வியை உருவாக்குகிறீர்கள். பின்னர் பதிலை உருவாக்குகிறீர்கள். பின்னர் அந்தப் பதில் மேலும் பத்து கேள்விகளை உருவாக்கு கிறது. நீங்கள் மேலும் பத்து பதில்களை உருவாக்குகிறீர்கள். அதன் பிறகு ஒவ்வொரு பதிலும் மேலும் பத்துக் கேள்விகளை உருவாக்குகின்றன.

அது ஒரு மரத்தைப் போன்றது. அது தொடர்ந்து வளர்ந்து கொண்டே போகிறது. மேலும் மேலும் பெரிதாகிறது. அதற்கு முடிவே இல்லை.

✧

உங்கள் வாழ்க்கையை வெறுமனே சாதாரணமாக வாழுங்கள். ஒவ்வொரு அனுபவத்திற்குப் பின்னாலும் ஒரு கேள்விக்குறியைப் போடாதீர்கள். மனிதர்கள் உங்களைப் பைத்தியம் என்று நினைக்கலாம். ஆனால் நீங்கள் பைத்தியம் என்றால் இந்த உயிர் வாழ்தல் மொத்தமுமே பைத்தியமாக இருக்க வேண்டும். என்ன செய்வது? இது நமது சக்திக்கு அப்பாற்பட்டது.

*தினமும் காலையில் ஏன் சூரியன் உதிக்கிறது? ஒருநாள்கூட விடுமுறை. ஒரே ஒரு நாள் கூட அது மேற்கிலிருந்து உதிப்பதும் இல்லை. ஒரு மாற்றத்திற்காகவேனும் நான் கிழக்கிலிருந்து உதிப்பதில் சலிப்படைந்து விட்டேன்!*

✧

*ஆண், தொடர்ந்து பல நூற்றாண்டுகளாக, பெண்களிடம் மிகவும் மனிதத் தன்மையற்று நடந்து வந்துள்ளான். இதில் விசேஷ விநோதமான விஷயம் என்னவென்றால் அவன் பெண்களுடன் ஒப்பிட்டுக் கொள்ளும் போது ஒரு ஆழமான தாழ்வு மனப்பான்மையை உணர்வதால் இவ்வாறு கொடூர மாகவும், மனிதத் தன்மையற்றும் பெண்களிடம் நடந்து வந்துள்ளான்.*

*இதில் மிகப் பெரிய பிரச்சனை என்னவென்றால், பெண்ணால் தாயாக முடியும்; அவளால் ஒரு உயிரைப் பிறப்பிக்கும் தொடக்கம் இதுதான். இயற்கை பெண்ணைச் சார்ந்து உள்ளது. ஆணைச் சார்ந்து அல்ல.*

*மேலும், பல வகைகளில் அவள் அவனை விட பலம் மிக்கவள் என்று அவன் கண்டு கொண்டுள்ளான்.*

✧

*உங்களது சொந்த வாழ்விலாவது, பெண்ணுக்கு இயன்ற அளவு சுதந்திரம் தர முயற்சி செய்யுங்கள். உங்களுக்கு நீங்கள் அனுமதிக்கின்ற அதே அளவு சுதந்திரத்தை அவளுக்கும் தாருங்கள். அவள் எழுந்து நிற்க உதவுங்கள். அவள் மீண்டும் மலரட்டும்.*

✧

உலகில் பாதிப் பேர் பெண்கள்தான். தமது திறமைகளை, அறிவை வளர்த்துக் கொள்ள அனுமதிக்கப்பட்டால், உலகம் மிக அழகானதாக விளங்கும். இது ஒரு கேள்விக்குரிய விஷயமே அல்ல.

யாருமே உயர்ந்தவர் அல்லர், யாருமே தாழ்ந்தவர் அல்லர். பெண்கள் பெண்களாக இருக்கிறார்கள்; ஆண்கள் ஆண்களாக இருக்கிறார்கள். அவர்களுக்கிடையில் வேறு பாடுகள் உண்டு. ஆனால் வேறுபாடுகள் யாரையும் உயர்ந்த வர்களாகவோ தாழ்ந்தவர்களாகவோ ஆக்குவதில்லை. அவர்களது வேறுபாடுகள் அவர்களது கவர்ச்சியை உருவாக்குகின்றன.

✧

வேறுபாடுகள் இருப்பதால், வேறுபட்ட கண்ணோட் டங்கள், வேறுபட்ட கருத்துகள் இருப்பதால் வாழ்க்கை செழுமையாக உள்ளது. யாரும் மேல் அல்ல, யாரும் கீழ் அல்ல. மனிதர்கள் சும்மா மாறுபட்டவர்கள் மட்டுமே.

✧

உங்கள் பெண் பத்தாயிரம் வருட அடக்கு முறை யிலிருந்து விடுபட உதவுங்கள். அவளுக்கு ஒரு நண்பனாக இருங்கள். ஏற்கெனவே நிறையத் துன்பம் விளைவிக்கப் பட்டு விட்டது; அவள் மிகவும் காயப்பட்டுள்ளாள். உங்களது அன்பால் அதை ஆற்ற (குணப்படுத்த) முடிந்தால் நீங்கள் முழு உலகிற்கும், முழு உலக உணர்வு நிலைக்கும் பங்களித்தவர் ஆவீர்கள்.

✧

இருபத்து நான்கு மணி நேரமும் நாம் தாங்கிப் பிடிக்கப்பட விரும்புகிறோம். ஏனெனில், தாங்கிப் பிடிக்க ஆளில்லாமல், போலியானது நிற்க முடியாது. ஒருவர் தனியாக ஆனவுடனேயே ஒரு விநோதமான பைத்தியக்காரத் தனத்தை நாம் உணர்கிறோம்.

✧

தியானம் என்பது தனியாக அமைதியாக இருந்து உண்மையாக தன்னைத் தானே நிலை நிறுத்திக் கொள்வதற்காகக் காத்திருப்பதற்கு ஒரு பெயர்தான். இது ஒரு செயல் அல்ல. இது ஒரு மௌனமான தளர்வு நிலை. ஏனெனில், நீங்கள் எதைச் செய்தாலும் அது உங்கள் போலி ஆளுமையிலிருந்துதான் வரும். உங்களது செயல்பாடுகள் சென்ற பல ஆண்டுகளாக அதிலிருந்துதான் வந்துள்ளன. அது ஒரு பழைய பழக்கம்.

✧

கூட்டம் என்பது போலியான, தான் வாழ்வதற்கான ஒரு அத்தியாவசியம்.

✧

எல்லா தியான முறைகளும் போலியானதை அழிக்க உதவுவன. அவை உங்களுக்கு உண்மையானதைத் தர முடியாது. உண்மையானது என்பது கொடுக்கப்பட முடியாதது.

கொடுக்கப்படக் கூடிய ஒன்று உண்மையாகாது. உண்மையானது உங்களிடம் ஏற்கெனவே உள்ளது. போலியானது மட்டுமே நீக்கிவிடப்பட வேண்டும்.

✧

கற்றுக் கொள்ளுதல் என்றால் இயல்பாகவே சந்தேகப் படுதல், கேள்வி கேட்டல், ஐயுறவு கொள்ளுதல், தெரிந்து கொள்ளும் விருப்பம் கொண்டிருத்தல் என்பனவற்றை உள்ளடக்கியது ஆகும். நிச்சயமாக அது நம்பிக்கை கொள்ப வராக இருப்பது அல்ல. ஏனெனில், ஒரு நம்பிக்கையாளர் ஒரு போதும் கற்றுக் கொள்வதில்லை.

✧

பாவம், (Sin) என்ற வார்த்தையின் வேரின் பொருள் மறந்துவிடுவது என்பதாகும். நாம் பாவத்தைப் பற்றிப் புரிந்து கொண்டுள்ள அர்த்தத்திற்கும் இதற்கும் ஒரு சம்பந்தமும் இல்லை. உங்களையே மறந்து போவதுதான் பாவம்.

உங்களை நினைவில் கொள்ளுவதுதான் நல் லொழுக்கம்.

✧

வேலை என்பது உங்கள் அன்பிலிருந்து வருவதானால், உருவாக்கும் திறனிலிருந்து வருவதானால் மிக அழகானது. அப்போது வேலைக்கு ஒரு ஆன்மிகத்தன்மை இருக்கிறது.

✧

உங்களது கற்றுக் கொள்ளலில் இருந்து, சீடனாக இருப்பதில் இருந்து, அர்ப்பணிப்பிலிருந்து, பக்தியிலிருந்து வருவதானால் கட்டுப்பாடு நல்லதாக உள்ளது. அப்போது அது உங்களுக்குள் ஒரு அழகான தீச்சுடர்போல வளர்ந்து கொண்டு உங்களது வாழ்க்கையைத் தனது ஒளியால் வழிகாட்டிக் கொண்டு இருக்கும்.

✧

கீழ்ப்படிதல் கூட மிகுந்த அழகுடன் இருக்கக் கூடும். ஆனால், அது உங்கள் ஈடுபாட்டின் உறுதிப்பாட்டிலிருந்து வரவேண்டும். யாரோ ஒருவருடைய கட்டளையிலிருந்து அல்ல. அது உங்கள் இதயத்திலிருந்து வரவேண்டும்.

ஞானம் பெறுவது என்பது நீங்கள் அதைப் பற்றி முற்றிலும் மறந்து போனபோது நடைபெறுகிறது.

ஞானம் வருகிறதா என்று கடைக்கண்ணால் கூடப் பார்க்காதீர்கள்; நீங்கள் தவறவிட்டு விடுவீர்கள். அதை முற்றிலும் மறந்து விடுங்கள்.

உங்களது எளிய வாழ்க்கையை இரசித்து மகிழுங்கள்.

✧

எல்லாமே மிக அழகாக இருக்கிறது. ஏன் நீங்களே உங்களுக்குக் கவலையையும் வருத்தத்தையும் உருவாக்கிக் கொள்கிறீர்கள்? ஆன்மிகத்தைப் பற்றிய விசித்திரமான பிரச்சனைகள் அவை, அவற்றைப் பற்றி நீங்கள் எதுவும் செய்யக் கூடிய விஷயங்கள் அல்ல.

உங்களால் உங்களது சாதாரண வாழ்க்கையை ஒரு அழகான கலையம்சம் கொண்ட பொருளாக ஆக்க முடிந்தால், நீங்கள் எப்போதுமே விரும்பிய எல்லாமே தானாகவே நடைபெறத் தொடங்கும்.

✧

கடவுளே வந்தால்கூட, தனது செயலின் முழுமையில் கிடைக்கும் பரிசு கடவுளைவிடப் பெரியது.

✧

ஆன்மிகத்தைப் பற்றி, ஞானம் கடவுள் பற்றி மறந்து விடு. அவர்கள் தங்களைத் தாங்களே கவனித்துக் கொள் வார்கள். அது அவர்களது பிழைப்பு. அவர்கள் அங்கே வாடிக் கையாளர்கள் இன்றி உட்கார்ந்து கொண்டிருக்கிறார்கள்.

நீ கவலைப்பட வேண்டாம். உன்னால் வாழ்க்கையை வைத்துக் கொண்டு என்ன செய்ய முடியுமோ அதைச் செய். அதுதான் உனது சோதனை, அதுதான் உனது ஆராதனை, அதுதான் உனது மதம்.

மீதம் எல்லாமே தாமாகவே பின்னால் வந்து சேரும்.

✧

பெரும்பாலான மனிதர்கள் வெறும் தாவரங்களைப் போல வாழ்கிறார்கள். அவர்கள் வாழ்வதில்லை. வாழ்வின் உயிருள்ள நீரோடைகளின் அருகில் அவர்கள் வருவதே இல்லை. அவர்கள் மூச்சு விடுகிறார்கள், முதுமை அடைகிறார்கள்; ஆனால், அவர்கள் வளர்வதே இல்லை.

அவர்களது பிறப்பிற்கும் இறப்பிற்கும் இடையே ஒரு இடை நேர்க்கோடு மட்டுமே உள்ளது. அங்கே மகிழ்ச்சியின் உச்சங்கள் இல்லை, சூரியஒளி மின்னும் ஆனந்தத்தின் முகடுகள் (உச்சிகள்) இல்லை. அங்கே அன்பு, அமைதி மற்றும் மௌனத்தின் ஆழங்கள் இல்லை. அங்கே தொட்டிலிலிருந்து கல்லறை வரை ஒரே ஒரு கிடைமட்ட நேர்க்கோடு, உப்புச் சப்பற்ற அதே பழக்கங்கள்தான்.

ஒன்றுமே நடப்பதில்லை. அவர்கள் வருகிறார்கள், போகிறார்கள்.

✧

குருவுடன் தொடர்பு கொண்டிருப்பது என்பது மறை முகமாக ஒரு வழியில், உயிர் வாழ்தலின் தெய்வீகத்தோடு தொடர்பு கொள்வதாகும்.

✧

வெளிப்படுத்தப்படக் கூடிய ஒன்று சாதாரணமானது. வெளிப்படுத்த முடியாத ஒன்று புனிதமானது.

✧

ஒரு பாடகனை உலகம் பைத்தியக்காரன் என்று நினைக்காவிட்டால் அவன் பாடகனே அல்லன். ஒரு நடனக் கலைஞன் மனநலவிடுதியில் சேர்க்கப்படாவிட்டால், உலகம் அவனுக்குச் சான்றிதழ் வழங்கவில்லை என்றாகிறது.

எல்லா அறிவுமிக்கவர்களும் உலகத்தாரால் இவ்வாறு தான் எண்ணப்பட்டு வருகிறார்கள்: ''பாவம், இவர்களுக்கு ஏதோ கோளாறு ஆகிவிட்டது.''

✧

ஒவ்வொரு கலைஞனும் பின்வரும் கருத்தைப் புரிந்துகொள்ள வேண்டும்.

மக்கள் அவனை (கலைஞன்) சற்றே மாறுபட்டவன், தலையில் கோளாறு உள்ளவன் என்று எண்ணத் தொடங் கியவுடனே, அவன் சாதாரணம் நடுத்தரம் என்பதிலிருந்து எல்லையைத் தாண்டிவிட்டான் என்று எண்ணி மகிழ்ச்சி கொள்ள வேண்டும்.

✧

தியானம் செய்யுங்கள். இசையை உங்கள் தியானமாகச் செய்யுங்கள். பாடுங்கள், பாட்டை - உங்கள் வாழ்க்கையாக,

மூச்சுக்காற்றாக, உங்களது இதயத் துடிப்பாக ஆக்கிக் கொள்ளுங்கள்.

✧

உலகத்திலே புனிதர்கள் மட்டும்தான் இறைத்தன்மை கொண்டவர்கள் என்ற முட்டாள்தனமான கருத்து நிலவி வந்துள்ளது. உண்மையில் 999 சதவிகிதப் புனிதர்கள் இறைத்தன்மை கொண்டவர்கள் அல்லர்.

உண்மையிலேயே இறைத்தன்மை பெற்றவர்கள் உருவாக்கும் பரிமாணங்களிலே உள்ளவர்கள், நடனக் கலைஞர்கள், கவிஞர்கள், ஓவியர்கள், பாடகர்கள், இசைக் கலைஞர்கள் மற்றும் சிற்பிகள் ஆகியோர்தாம்.

✧

உருவாக்கும் மனிதனுக்குத்தான் எதிர்காலம் சொந்தமாக உள்ளது.

இறந்தகாலம் உருவாக்க முடியாத புனிதர்களுக்குச் சொந்தமானது. அவர்கள் எதையும் உருவாக்கியதில்லை. அவர்களது ஒரே தன்மை சுயசித்திரவதைதான். அவர்கள் உண்மையிலேயே தம்மைத் தாமே வருத்திக் கொள்பவர் களாக இருந்தார்கள். மேலான மற்றொரு உலகத்தில் அவர்கள் சிகிச்சையளிக்கப்பட்டிருப்பார்கள். வழிபடப் பட்டிருக்கமாட்டார்கள். அவர்கள் புனிதர்கள் அல்லர், மனோரீதியான நோயாளிகள்.

ஆனால், அப்போது உருவாக்க முடியாத தன்மை உச்சத்தில் இருந்ததால், மேம்பட்டு இருந்ததால், உருவாக்கும் தன்மை கொண்ட மனிதர்கள் மிகவும் துன்பத்துக்குள்ளா னார்கள். அவர்கள் நோயாளிகளாகக் கருதப்பட்டார்கள்.

✧

பசியைப்பற்றி சில விஷயங்களை நினைவில் கொள்ள வேண்டும். நீங்கள் உண்ணாவிரதம் இருக்கும்போது முதல் மூன்று நாட்கள்தான் நீங்கள் பசியை உணர்வீர்கள். மூன்றாம் நாளுக்குப் பிறகு, பசி மறையத் தொடங்கும்.

ஏனெனில், உடலில் ஒரு அவசரகால ஏற்பாடு உள்ளது. மூன்று நாட்கள் அது உணவுக்காகக் காத்திருக்கும். அதற்குமேல் அதனால் காத்திருக்க முடியாது. மூன்றாவது நாளுக்குப் பின்னர் அது தன்னைத் தானே சாப்பிடத் தொடங்குகிறது. அதனால்தான் உங்கள் எடை குறையத் தொடங்குகிறது.

அந்த எடை எங்கே சென்று மறைகிறது என்று நீங்கள் எப்போதாவது எண்ணமிட்டதுண்டா?

விரதமிருப்பது என்பது ஒரு வகையான மனிதரை உண்ணும்முறை; உங்களையே உண்டுவிடுவது. இது மிக மோசமான மனிதரை உண்ணும் முறை ஆகும். பிறரை உண்ணுவது புரிந்து கொள்ளத்தக்க ஒன்று; ஆனால், தன்னையே உண்ணுவது?

ஆனால், இவர்கள்தான் உங்கள் புனிதர்கள். அவர்களுடைய குணங்கள் எல்லாம் மரணத்திற்குச் சேவை செய்வதாகவே இருந்தன. வாழ்க்கைக்குச் சேவை செய்வனவாக அல்ல.

✧

எனது சந்நியாசிகள் ஒரு புதிய குணம் கொண்ட புனிதர்களாக இருக்க வேண்டும் என்று நான் விரும்புகிறேன். அந்தக் குணம் வாழ்விற்குச் சேவை செய்வதாக, வாழ்விற்கு உயிரூட்டுவதாக, ஏற்றுக் கொள்வதாக, வாழ்க்கையை

இன்னும் கொஞ்சம் அழகுள்ளதாக ஆக்குவதாக, அதற்கு மேலும் சில மலர்களைக் கொண்டு வருவதாக இருக்க வேண்டும்.

✧

தியானம் என்பது கடந்த காலத்தில் வாழ்க்கைக்கு எதிர்மறையானதாக இருந்து வந்துள்ளது. வாழ்க்கையையும், அதை அர்த்தமுள்ளதாகச் செய்யும் எதையுமே துறந்துவிட வேண்டும்.

என்னைப் பொறுத்தவரையில், தியானம் என்பது இன்றளவு வரை இருந்து வந்ததிலிருந்து முற்றிலும் எதிர்மறையானது.

தியானம் என்பது ஒரு மௌனமான இதயம், ஒரு அமைதியான மனம். இது வாழ்க்கை என்பதை மேலும் நேசிக்கப்படுவதாய், வாழப்படுவதாய், ஒவ்வொரு பரிணாமத்திலும் வாழ்க்கையைச் செழிப்புள்ளதாக ஆக்கும் ஒரு விஷயம். நான் நீங்கள் எதையும் துறந்துவிடுவதை விரும்பவில்லை.

நீங்கள் எதைச் செய்வதாக இருந்தாலும் அதில் மகிழ்ச்சியடைவதை விரும்புகிறேன்.

✧

நீங்கள் ஒரு இசைக் கலைஞராக இருந்தால் இசை உங்களின் தியானம் ஆகட்டும். இதுதான் உங்களுடைய மதம். இஸ்லாம் அல்ல, இந்துமதம் அல்ல. கிறித்தவம் அல்ல. இசை உங்களது மதம். நீங்கள் ஒரு நடனக் கலைஞரானால், அப்போது நடனம் உங்கள் மதம் ஆகிறது.

✧

ஒவ்வொருவரும் தனது பிள்ளைப் பருவ முதலே வெறுத்தொதுக்கப்படுகிறார்.

தானாகவே, தனது விருப்பப்படி செய்கின்ற எதுவுமே ஏற்றுக் கொள்ளப்படுவதில்லை. மக்கள், பிள்ளை வளர வேண்டிய பருவத்தில், தங்களது சொந்தக் கருத்துகளை, இலட்சியங்களைக் கொண்டுள்ளது. பிள்ளை அந்தக் கருத்து களுக்கும், இலட்சியங்களுக்கும் ஏற்பத் தன்னை ஒழுங்கமைத்துக் கொள்ள வேண்டியுள்ளது.

இதைப்பற்றி நீங்கள் எப்போதாவது யோசித்துப் பார்த்ததுண்டா? உலகிலேயே உள்ள உயிரினங்கள் மிகவும் உதவியற்ற குழந்தை மனிதக் குழந்தைதான். தங்களது கூட்டம் மற்றும் பெற்றோரின் உதவியின்றி எல்லா விலங்குகளாலும் உயிர் பிழைக்க முடியும். ஆனால், மனிதக் குழந்தையால் இதைச் செய்ய முடியாது.

இயல்பாகவே, சக்தி உள்ளவர்களால் அந்தக் குழந் தையைத் தாங்கள் விரும்பியவண்ணம் வடிவமைத்துக் கொள்ள முடியாது.

எனவே, எல்லோருமே தனக்கு எதிராக தான் என்னவாக இருக்கிறானோ அதுவாக வேண்டியுள்ளது. தான் இல்லாத ஒன்றாகத் தன்னை ஒவ்வொருவரும் பாவித்துக் கொள்ள விரும்புவதன் பின்னால் உள்ள மனோதத்துவம் இதுதான்.

✧

ஒவ்வொருவரும் மனோரீதியாக இரட்டைக் குணாம் சங்களைக் கொண்டுள்ளனர். அவன் ஒரு போதும் தானாக இருக்க அனுமதிக்கப்பட்டதில்லை. வேறு யாரோ ஒருவராக இருக்கும்படி வற்புறுத்தப்படுகிறான். இதனால்

இதனுடன் அவனது இயற்கை இயல்பு மகிழ்ச்சியாக இருக்க விடுவதில்லை.

எனவே, வளர்ந்து தனது சொந்தக் கால்களில் நிற்கும் பொழுது உண்மையிலேயே தன்னில் ஒரு பகுதியாகத்தான் கொண்டிருக்க வேண்டி விரும்பிய பல விஷயங்களை அவன் பாவனை செய்து கொள்ளத் தொடங்குகிறான்.

ஆனால், இந்தப் பைத்தியக்கார உலகில் அவன் திசை திருப்பப்படுகிறான். அவன் அதுவாக இல்லை. அது அவனுக்குத் தெரியும். எல்லோருக்கும் அது தெரியும். தான் ஒரு மருத்துவராகவோ, என்ஜினியராகவோ இருக்கும்படி கட்டாயப்படுத்தப்பட்டுள்ளான். ஒரு அரசியல்வாதி யாகவோ, ஒரு குற்றவாளியாகவோ, பிச்சைக்காரனாகவோ ஆகக் கட்டாயப்படுத்தப்பட்டுள்ளான்.

✧

இந்த உலகில், ஒரே ஒரு மகிழ்ச்சிதான் உண்டு. அதுதான் நீங்களாகவே இருப்பது.

ஆனால், எவருமே தானாக இல்லாததால், ஒவ்வொரு வரும் எப்படியாவது மறைந்து கொள்ள முயற்சி செய் கிறார்கள். முகமூடிகள், பாவனைகள், பொய் வேஷங்கள் - அவர்கள் யாராக இருக்கிறார்களோ அதுபற்றி வெட்கத்துடன் இருக்கிறார்கள்.

✧

உங்களுக்கு எல்லாம் கற்றுக் கொடுக்கப்படுகிறது. ஆனால், நீங்களாகவே இருப்பது எப்படி என்று கற்றுக் கொடுக்கப்படுவதில்லை. இதுதான் மிகவும் அவலட்

சணமான சமுதாயமாக இருக்க முடியும்; ஏனெனில், இது அனைவரையும் துன்பத்திற்கு உள்ளாக்குகிறது.

✧

நீ யாராக இருக்க விரும்பவில்லையோ அதுவாக இருப்பது, யாருடன் இருக்க விரும்பவில்லையோ அவருடன் இருப்பது, செய்ய விரும்பாத செயலைச் செய்வது என இவையெல்லாம்தான் உங்கள் எல்லாத் துன்பங்களுக்கும் அடிப்படை.

✧

ஒரு பக்கம் சமூகம் அனைவரையும் துயரத்துக் குள்ளாக்கி உள்ளது. மற்றொரு பக்கம் அதே சமூகம் நீங்கள் உங்கள் துயரத்தை வெளிக்காட்டிக் கொள்ளக் கூடாது - குறைந்தபட்சம் பொது இடத்தில் காட்டிக் கொள்ளக் கூடாது என்று எதிர்பார்க்கிறது. அது உங்கள் சொந்த விஷயம்.

அவர்கள் அதை உருவாக்கியுள்ளனர். எனவே, அது உண்மையிலேயே பொது விஷயம், சொந்த விஷயம் அல்ல. உங்களது துயரத்திற்கான காரணங்கள் அத்தனையையும் உருவாக்கியுள்ள அதே கும்பல் 'உங்கள் துயரம் உங்கள் சொந்தம். ஆனால், நீங்கள் வெளியே வரும்போது புன்னகையுடன் வாருங்கள். உங்கள் துயரமான முகத்தை மற்றவர்களுக்குக் காட்டாதீர்கள்' என்று உங்களிடம் சொல்கிறது.

இதை அவர்கள் பழகும் பண்பு, மரியாதை, கலாச்சாரம் என்று அழைக்கிறார்கள். அடிப்படையில் அது போலி வேஷம்.

✧

*நீங்கள் எப்படி இருக்கிறீர்களோ அப்படியே இருக்கும் அந்த சமயத்தில், புரிதலுக்கு அப்பாற்பட்ட ஒரு மகத்தான நிம்மதி இருக்கிறது.*

✧

*நீங்கள் இந்த உலகில் ஒரு நடிகன் முழுவதும் தயாராக நாடகமேடைக்கு வருவதுபோல வருகிறீர்கள். அதனால் எதையும் மாற்ற முடியாது.*

*எப்போதாவது ஒருமுறை நடிகர்களால் விஷயங்களை மாற்ற முடியும். ஏனெனில், நாடகம் நாடகம்தானே!...*

✧

*உயிர் வாழ்தல் உங்களுக்குப் பிறப்பை ஒரு எழுதப் படாத பலகையாகத் தருகிறது. எந்தத் தலைவிதியும் எழுதப்படவில்லை. நீங்கள் செய்வது எதுவாக இருந்தாலும் இதுதான் நடக்கும் என்று எதுவும் எழுதப்படவில்லை.*

*உயிர் வாழ்தல் என்பது சுதந்திரம். தலைவிதி என்பது அடிமைத்தனம்.*

*சுதந்திரம் என்பது என்ன நடக்கப் போகிறது என்று நீங்கள் முடிவு எடுப்பது உங்கள் கையில் உள்ளது.*

*தலைவிதி என்பது ஒரு பொய்யான விதிமுறை.*

✧

*நம்பிக்கை என்பது ஆழமான தியானத்தின் வெளிப் பாடு. தலைவிதி என்பது உங்களுடைய தோல்விகளின் வெளிப்பாடு, மனதின் ஆறுதல்.*

*இவை இரண்டும் முற்றிலும் மாறுபட்டவை.*

✧

மக்களைக் குற்றம் சொல்வது, அவர்களுக்கு எதிராகக் குறைசொல்வது உங்களுக்கு ஒரு நல்ல உணர்வைத் தருகிறது. மற்றவர்களைக் குறை சொல்வது உங்களை உயர்வாக எண்ணிக் கொள்ள வைக்கிறது. மற்றவர்களைப் பற்றிப் புகார் சொல்கிறபோது நீங்கள் அவர்களைவிட உயர்வாக உணர்கிறீர்கள். கிட்டத்தட்ட எல்லாரும் அதைச் செய்கிறார்கள் என்று நான் சொல்லுகிறேன்.

ஒரு சிலர் அதை வெளியில் கேட்கும்படி உரக்கச் சொல்கிறார்கள். இன்னும் சிலர் அதைத் தமக்குள்ளே செய்து கொள்கிறார்கள். ஆனால், இதனால் வரும் மகிழ்ச்சி ஒன்றுதான்.

✧

ஒரு அறிவாளி, புத்திசாலி எப்போதுமே அடக்கத்துடன் இருப்பார்.

✧

அறிவின் உலகில் அடக்கமாக இருங்கள்.

✧

எவரையும் குற்றம் சொல்வதற்கு முன்பு, எல்லாப் பக்கங்களிலிருந்தும், எல்லாக் கோணங்களில் இருந்தும், எல்லா சாத்தியமான கண்ணோட்டங்களிலிருந்தும் உண்மையைப் பாருங்கள். நீங்கள் வியப்படைவீர்கள்.

குறைசொல்வதற்கும் குற்றம் சாட்டுவதற்கும் அங்கே மிகக் குறைவான விஷயமே எஞ்சி நிற்கும். அந்த அளவு கவனத்தை நீங்கள் செலுத்தினீர்களேயானால், நீங்கள் எதைப் பற்றிக் குற்றம் சொன்னீர்களோ அது ஏற்றுக் கொள்ளப் பட்டுவிடும்.

✧

யாருமே பிறரைப் பாராட்டுவதில் ஆர்வம் காட்டுவதில்லை. பிறரிடம் உள்ள நல்ல குணங்களைக் கண்டு பிடிப்பதில் அக்கறை காட்டுவதில்லை. அந்தக் குணங்களை வளர உதவுவதற்கு யாருமே தயாராக இல்லை. எல்லாரும் பயப்படுகிறார்கள். எல்லாருமே வளர்ந்து கொண்டிருந்தால், தான் என்னாவது?

அவனது முழுக்கவலையும் தனது, தான் என்பது பெரிதாக வேண்டும். இதைச் செய்ய சுலபமான வழி எல்லாரையும் குற்றம் கண்டுபிடிப்பது, எல்லாவற்றையும் பற்றிக் குறைசொல்வதுதான்.

எதிர்மறையாக இருங்கள். எதிர்மறை உங்கள் அணுகுமுறையாக இருக்கட்டும். அதற்கு உங்களுக்குப் புத்திசாலித்தனம் தேவையில்லை. எந்த முட்டாளும் அதைச் செய்ய முடியும்.

ஆனால், உண்மையிலேயே திறனாய்வு செய்வதற்கு, மிகவும் இரக்க குணத்துடன், அன்புடன் இருக்க வேண்டும. இதற்கு, நேரம், சக்தி மற்றும் அறிவைச் செலவிடத் தயாராக இருக்க வேண்டும். அப்போது அது குறைசொல்வதல்ல, எதிர்மனப்பான்மை கொண்டதல்ல, எதிர்மறையானது அல்ல. அது நட்புடன் கூடிய ஒரு அறிவுரை, ஒரு ஆதரவான அணுகுமுறை என்பது புரியும்.

✧

எல்லோரும் அனுதாபத்துடன் இருக்கப் பழகிக் கொள்ள வேண்டும். உங்கள் தியானம் உங்களுக்குக் குறை சொல்ல அல்ல, பாராட்ட உதவி செய்ய வேண்டும்.

மேலும் நீங்கள் போதுமான அளவு புத்திசாலித் தனத்துடன் இருந்தால், நீங்கள் என்ன குற்றம் சொல்ல

வேண்டுமென்று விரும்பினார்களோ அது சொல்லப் படாமலே புரிந்து கொள்ளப்படும் அளவில் உங்கள் பாராட்டு அமையும்.

✧

எவர் ஒருவரும் ஒரு தனி மனிதனுக்கும் படைப்புக்கும் நடுவுக்கே நிற்பதை நான் விரும்பவில்லை. எந்தப் பிரார்த்தனையும் தேவையில்லை. எந்த மத குருவுக்கும் வேலை இல்லை. சூரியனின் உதயத்தைப் பார்ப்பதற்கு நீ ஒருவன் மட்டுமே போதும். சூரியனின் உதயம் எத்தனை அழகானது என்பதை எடுத்துக் கூற யார் ஒருவரும் உனக்குத் தேவை இல்லை.

✧

அமைதியாக முழுமையாக வாழ்தலே ஒரு மிகப் பெரிய சக்தியாகும். நீங்கள் முழுமையாக வாழ்தல் மட்டுமின்றி மற்றவர்களையும் ஒரு கனலாக, ஒரு சுடராக, ஒரு பிழம்பாக, ஒரு ஜுவாலையாக ஆக்க முடியும்.

இப்போது, இங்கே இந்த நிகழ்கால கணத்தில் நீங்கள் முழுமையாக ஈடுபட்டிருந்தால் நோய்கள் தாக்கும் பகுதியிலிருந்து நீங்கள் பூரணமாக விடுதலை பெற்று விடுவீர்கள்.

✧

இங்கே இந்த நிகழ்காலக் கணம் என்பது நிறைவானதாக ஆக்கப்பட வேண்டும். இப்போது இங்கே இந்த நிகழ்காலக் கணம் மிகவும் ஆழமான திருப்தி நிறைந்ததாக ஆக்கப்பட வேண்டும். இப்படிப்பட்ட பூரணமான நிறைவு, ஆழமான திருப்தி காரணமாக வாழ வேண்டும் என்னும் விருப்பத்திற்கே அவசியமில்லாமல் போய்விட

வேண்டும். இதைத்தான் உங்களுக்கு அளிப்பதற்கு நான் முயற்சி செய்து கொண்டிருக்கிறேன்.

✧

எவற்றை எல்லாம் உங்கள் இதயம் எடுத்துக் கொள் கிறதோ அதற்கு ஏற்ப உங்கள் நடவடிக்கைகளில் மாற்றம் வரும். நடத்தைகள் மாறுபடும். அது உங்களுக்கு அறிவைத் தராது. ஆனால், மாற்றத்தைக் கொண்டு வரும்.

✧

எண்ணத்தை நிறுத்துவது என்ற எண்ணத்தைக் கை விடுங்கள். அப்படி இல்லையெனில், அது மனத்தின் இயற் கையான மாற்றத்தை நிறுத்திவிடும். நிறுத்துவது என்ற எண் ணத்தைக் கைவிடுங்கள். நீங்கள் யார் அதை நிறுத்துவதற்கு?

கெட்ட எண்ணங்கள் உங்கள் மனதில் வந்தால் அவைகள் வரட்டும். அதில் தவறு ஏதுமில்லை. நீங்கள் உங்கள் உள்திரையில் ஒரு சினிமா பார்க்கிறீர்கள். அதை அப்படியே அதன் வழியே விட்டு விடுங்கள். இப்படியே மெல்ல மெல்ல இது உங்களை மனம் அற்ற நிலைக்கு எடுத்துச் செல்லும்.

கவனித்தல் முடிவில் மனம் அற்ற நிலையாகிறது. மனம் அற்றநிலை மனதிற்கு எதிரானல்ல. மனம் அற்ற நிலை மனதிற்கு அப்பால் உள்ளது. மனதைச் சாகடிப்பதால் மனம் அற்ற நிலை வருவதில்லை. மனதை முழுமையாகப் புரிந்து கொண்டு எண்ணுதல் இனி தேவை இல்லை என்ற கட்டத்தை அடையும்போது மனம் அற்ற நிலை உண்டாகின்றது.

✧

மனம் உங்கள் மலர்ச்சியாகும். இதை எந்த வகையிலும் பலவந்தப்படுத்தாதீர்கள். நான் எல்லா வகையான பலவந்தப் படுத்தலுக்கும், முக்கியமாக ஒருவர் தன்னையே வருத்திக் கொள்வதற்கும் எதிரானவன். சற்று கவனியுங்கள். உங்கள் பிரார்த்தனையில் ஆழ்ந்த நேசத்தில், ஆழ்ந்த மரியாதையில் என்ன நிகழ்கிறது என்று கவனியுங்கள். அற்புதங்கள் தானாக நிகழும். அங்கு வெளியே இழுக்கவோ அல்லது உள்ளே அழுக்கவோ தேவையில்லை.

✧

எல்லா இடங்களிலும் அற்புதம் இருக்கிறது. அன்பு அற்புதம்தான். நீங்கள் நயாகரா அருவி அருகே அல்லது இமயமலைச்சாரலில் இருந்தால் என்ன? அன்பு எல்லா இடத்திலும் அற்புதம்தான். எங்கிருந்தாலும் அன்பு அற்புதம் தான். பகிர்ந்து கொள்ளுவது அற்புதமானதுதான். யாருடன் பகிர்ந்து கொள்ளுகிறோம் என்பது சம்பந்தமில்லாத விஷயம்.

எனக்குத் தெரியும் உங்கள் மனம் பகிர்ந்து கொள்ளா திருக்க அனேக வழிகளைத் தேடும். மனதின் ஏமாற்று வேலைகளைத் தவிர்த்து விடுங்கள். நீங்கள் பகிர்ந்து கொள்ள வேண்டும். எப்பொழுதெல்லாம் பகிர்ந்து கொள்ள சந்தர்ப் பம் கிடைக்கிறதோ அப்பொழுது நீங்கள் மகிழ்ச்சியடைய வேண்டும்.

✧

நீங்கள் இறப்பதற்கு முன்பாக உங்களிடம் என்ன வெல்லாம் இருக்கிறதோ அவைகளைப் பகிர்ந்து கொள் ளுங்கள். நீங்கள் நல்ல மனதுடன் இருந்தால் உங்கள் முழு வாழ்க்கையையுமே பகிர்ந்து கொள்ளுவீர்கள். நீங்கள்

இறப்பதற்கு முன் அன்பில் உங்களைச் செலவழித்து விடுங்கள்.

✧

கோயில்கள், சர்ச்சுகள், மசூதிகள், குருத்துவாரங்கள் அனைத்தும் ஏமாற்றம், சோகம், வெறுப்பு, வேதனை நிறைந்த மக்களால் நிரம்பி வழிந்து கொண்டிருக்கிறது. இப்படிப்பட்ட மக்கள் இறைவழிபாட்டுத் தலங்கள் அனைத்தையும் கெடுத்துக் குட்டிச் சுவராக்கி - நரகமாக்கி விட்டார்கள். மிகவும் தாங்க முடியாத வலி, வேதனை காரணமாக அவர்கள் அங்கே இருந்து கொண்டிருக்கிறார்கள்.

அவர்களிடம் ஆன்மீக விசாரிப்பு கிடையாது. அவர்களிடம் ஆன்மீகத்தேடல் கிடையாது. அவர்களிடம் உண்மையில் விருப்பம் கிடையாது. அவர்களுக்குக் கடவுளைப் பற்றித் தெரியாது. அவர்களிடம் கடவுளைப் பற்றிய அக்கறையும் கிடையாது. ஆறுதல் பெறுவதற் காகவும், சௌகரியம் அடைவதற்காகவும் மட்டுமே அவர்கள் அங்கே இருந்து கொண்டிருக்கிறார்கள்.

தங்களுடைய வேதனைகளை மூடிக் கொள்ள, தங் களுடைய காயங்களை மறைத்துக் கொள்ள, தங்களுடைய வாழ்க்கைக்கு ஒட்டுப் போட்டுக் கொள்ள, மலிவான நம்பிக் கைகளை வினியோகம் செய்து கொண்டிருப்பவர்களை அவர்கள் தேடிக் கொண்டிருக்கிறார்கள். ஒரு பொய்யான சமாதானம், ஒரு போலியான ஆறுதல் தேடி அங்கே இருந்து கொண்டிருக்கிறார்கள்.

✧

படைப்பினை ஏற்றுக் கொண்டு அதன்போக்கில் நீ போனால் படைப்பு உன்னைப் பாதுகாக்கிறது. அப்படிச் செய்யாமல் நீ செய்து கொள்ள முனையும் தற்காப்பு, பாதுகாப்பு, தாக்குதல் போர், சண்டை ஆகியவைகளே உன்னை அழித்து விடுகிறது.

✧

இந்த உலகம் அழிவின் விளிம்பில் இருக்கிறது என்பதற்கு நான் ஐந்து காரணங்களைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். 1) அணு ஆயுதக் குவிப்பு, 2) மக்கள்தொகைப் பெருக்கம், 3) எய்ட்ஸ் நோயின் தாக்கம், 4) நாடுகளுக்குள் தோன்றும் கருத்து வேற்றுமை, 5) மதச் சண்டைகள்.

✧

இந்த உலகம் அழிவிலிருந்து தப்ப வேண்டுமானால் ஞானவிழிப்பு பெற்ற ஞானிகள் தேவைப்படுகிறார்கள். இவர்கள் எங்கே இருக்கிறார்கள் என்றால் அவர்கள் உங்களிடமிருந்துதான் பிறக்க வேண்டும்.

நீங்கள்தான் ஞானிகளாக மாற வேண்டும். ஆனால், உங்களுடைய வளர்ச்சியோ மிகவும் சாவகாசமாக, மெதுவாக, தாமதமாக இருக்கிறது. நீங்கள் இந்த வகையான ஞானவிழிப்பு பெறுவதற்கு முன்பாகவே இந்த உலகம் அழிந்துவிடக் கூடும்.

✧

என்னைப் பொறுத்தவரையில் தியானம், விழிப்புணர்வு என்பன உன்னிடம் முக்கியத்துவம், முதலிடம், முன்னுரிமை பெற வேண்டும் என்று விரும்புகிறேன்.

✧

மிகப் பெரிய பொறுப்பு உங்கள்மீது சுமத்தப் பட்டிருக்கிறது. உலகம் முழுவதுமே வேறு எங்குமே மிகச் சிறிய குழுக்களாகக் கூட மக்கள் ஆனந்தமாக இருக்க வேண்டும். அன்போடு இருக்க வேண்டும். தியானத் தன்மையில் இருக்க வேண்டும். ஞானவிழிப்பில் இருக்க வேண்டும் என்று முயற்சி செய்து கொண்டிருக்கவில்லை.

இந்த உலகம் என்னும் கடலில் நாம் ஒரு மிகச் சிறிய தீவாக இருக்கிறோம். பரவாயில்லை. ஒரு சில மக்கள் காப்பாற்றப்பட முடியுமானால் இந்த மனித சமுதாயத்தின் வரலாறு, அனைத்து ஞானிகள், ஞானவிழிப்பு பெற்றவர் களின் வரலாறு. உங்களால் காப்பாற்றப்படும்.

✧

உலகுக்கு நீ வலிமை சேர்க்கும்போது நீ உண்மை யிலேயே வலிமையானவனாக மிகப் பெரிய மாபெரும் வலிமையானவனாக ஆகிறாய்.

✧

ஆன்மிகத்தில் வலிமையாக இருக்கும் ஒரு மனிதன் மனத்தளவில் ஓர் ஏழை. அவனிடம் அகம்பாவம் கிடையாது. அவன் மனம் காலியாக இருக்கும். அவன் எதையும் வைத்திருப்பதில்லை. அவனுக்கு எதுவும் தெரியாது. அவனிடம் எதுவும் கிடையாது. இந்த நிலையில் அவன் ஏழை. ஆனால், அவனே இல்லை என்பதால் அவன் கடவுளைப் பெற்றுக் கொள்ளத் தகுதியானவன் ஆகிவிடு கிறான். அவன் எதையும் வைத்திருப்பதில்லை என்பதால் எல்லாம் அவனுக்குச் சொந்தமாகி விடுகிறது.

இப்படிப்பட்ட வாழ்க்கைதான் அழகான, அழகு நிறைந்த வடிவம் கொண்ட வாழ்க்கையாகும்.

✧

வாழ்க்கை என்னும் நீரோட்டத்தில் அதன் போக்கிலேயே பயணம் செய்வாயாக. நீரோட்டத்தின் போக்கை எதிர்த்துச் செல்ல முயற்சி செய்ய வேண்டாம். மேலும், நீரோட்டத்தைக் காட்டிலும் வேகமாகவும் செல்ல முயல வேண்டாம்.

முழுமையான ஓய்வுத் தன்மையில் நீரோட்டத்தின் போக்கிலேயே மிதந்து செல். ஒவ்வொரு வினாடியிலும் நீ உன்னுடைய சொந்தவீட்டில் இருப்பதுபோல் இரு. ஒவ்வொரு வினாடியிலும் நீ படைப்போடு முழுமையான, முற்றிலுமான, இயல்பான, இயற்கையான, இணக்கமான, இசைவான, இலகுவான, இனிமையான அமைதியில் திளைத்திரு.

✧

நான் படைப்பின்மீது முழுமையான, முற்றிலுமாக, நம்பிக்கை வைத்து வாழ்ந்து கொண்டிருக்கிறேன். இப்போது இங்கே நான் இருப்பது தேவை என்றால் என்னை அது பார்த்துக் கொள்ளும். தேவை இல்லையென்றால் அது பார்த்துக் கொள்ளாது.

படைப்பின்மீது என்னுடைய நம்பிக்கை முழுமையானது. படைப்பின்மீது நம்பிக்கை வைக்காத மனிதர்கள் சொத்து, பணம், கடவுள் என்று பல வகையான முட்டாள்தனமான விஷயங்கள்மீது நம்பிக்கை வைக்கிறார்கள்.

✧

என்னுடைய போதனைகளில் வாழ்வது என்று முவு செய்தால், அதனை ஆரம்பிக்க வேண்டிய நாள் இன்றுதான். நாளைக்கு நான் ஆரம்பிக்கிறேன் என்று உன்னை நீயே ஏமாற்றிக் கொள்ள முடியாது. ஏனெனில், நாளை என்பது உன்னுடைய கரங்களில் இல்லை. நாளை என்பது வராமலே கூடப் போய்விடலாம். நிலையானது என்பது மரணம் போன்றது. நிலையற்ற தன்மை என்பது மிகவும் அழகானது.

✧

எந்த ஒரு கோவிலுக்கோ, சர்ச்சுக்கோ, மசூதிக்கோ செல்ல வேண்டிய அவசியம் எதுவுமே கிடையாது. இந்தப் படைப்பு மொத்தமும் ஓர் ஆலயம்தான். மரங்கள் அனைத்தும் தொழுது கொண்டு இருக்கின்றன. மேகங்கள் அனைத்தும் பிரார்த்தனையில் இருக்கின்றன. மலைகள் அனைத்தும் தியானத்தில் ஆழ்ந்திருக்கின்றன. இயல்பாக உன்னைச் சுற்றிலும் பார்க்க ஆரம்பிக்கவும்.

✧

அறியாமைக்கு ஆரம்பம் கிடையாது. ஆனால், முடிவு உண்டு. அறியாமை முடிவதன் காரணமாக விழிப் புணர்வுக்கு ஆரம்பம் இருக்கிறது. ஆனால், அதற்கு முடிவு கிடையாது. அது தொடர்ந்து இருந்து கொண்டே இருக்கிறது.

✧

எதிர்மறையாகச் சிந்திப்பது ஓர் அழகான தியான மாகும். இது மிகவும் உபயோகமுள்ளது. உதாரணமாக நீங்கள் திருப்தியற்று இருந்தால் என்ன செய்ய வேண்டும்? எதிர்மறையாகச் சிந்தனை செய்ய வேண்டும்.

நீங்கள் திருப்தியற்று இருந்தால், திருப்தியான தன்மையைப் பற்றி ஆழ்ந்து சிந்தனை செய்யுங்கள். திருப்தியுறுவது என்றால் என்ன? ஒரு நடுமையத்தைக் கொண்டு வருதல் என்று பொருள். உங்கள் மனம் கோபத்தில் இருந்தால் அன்பையும், கருணையையும் அங்கு வரவழையுங்கள்.

உடனே உங்கள் சக்தி வேறு திசைகள் மாறிச் செல்லும். ஏனெனில், இரண்டுக்கும் சக்தி என்பது ஒன்றுதான். எதிர்த் திசையிலும் அதே சக்திதான் மாறிச் செல்லும். கருணையை நீங்கள் உள்ளே கொண்டு வந்தால் மனம் அதை ஏற்றுக் கொள்ளும்.

ஆகவே, ஒன்று செய்யுங்கள். ஒரு புத்தர் சிலையை உங்கள் அறையில் வைக்கவும். அந்தச் சிலை கருணைக்கும் அன்புக்கும் அடையாளமாகும். நீங்கள் எப்பொழுதாவது ஆத்திரத்தில் இருந்தால் அந்த அறைக்குச் சென்று அந்தப் புத்தர் சிலையைச் சற்று உற்றுநோக்கவும்.

பிறகு புத்தர் போலவே உட்கார்ந்து அவருடைய கருணையை உங்களுடைய மனத்தில் உணருங்கள். திடீரென்று உங்கள் உள்ளே ஒரு மாறுதல் ஏற்படுவதை உணருவீர்கள்.

உங்களுடைய ஆத்திரம், அமைதியற்ற தன்மை மாறி கருணை பிறப்பதை உணர்வீர்கள். கருணையின் சக்தி வேறு அல்ல. அதே ஆத்திர சக்திதான் இப்போது கருணை சக்தியாக மாறி இருக்கிறது. அதன் தன்மையால், நீங்கள் உயரே சென்றிருக்கிறீர்கள். முயற்சி செய்து பாருங்கள்.

✧

தியானம் என்னும் சொல் ஏதோ அரிய பெரிய விஷயம் போலத் தெரிகிறது. தியானம் என்பது ஒரு சாதாரணமான எதார்த்தமான அமைதி நிலை. ஓய்வு நிலை என்று கூறுவது பொருத்தமானது. சாலச் சிறந்தது.

தியானத்தில் படைப்பு தன்னுடைய அழகு முழுவதை யும் உனக்குக் கிடைக்கச் செய்கிறது. தியானம் வளர, வளர நீயும் வளர்கிறாய். பிறகு உன்னுடைய ஆற்றல்கள், திறன்கள், பெரிய உச்சத்தை அடைவது நிகழ்கிறது. இதை புத்தத்தன்மை, கடவுள்தன்மை, ஞானவிழிப்பு என்று எப்படி வேண்டுமானாலும் அழைக்கலாம். அதற்குப் பெயர் கிடையாது.

✧

என்னுடைய கண்ணோட்டம் இதுதான். நீ இங்கே இருக்கிறாய். ஒவ்வொருவரும் இங்கே இருக்கிறார்கள். இந்தப் படைப்பு முழுவதுமே கிடைப்பதாக இருக்கிறது. உனக்குத் தேவைப்படுவதெல்லாம் அமைதியாக இருந்து கொண்டு படைப்புக்கு செவிமடுப்பதுதான்.

இங்கே எந்த மதத்திற்கும் எந்தவிதத் தேவையும் இல்லை. எந்த மத குருமார்களுக்கும் எந்தவிதத் தேவையும் இல்லை. எந்த ஒழுங்குபடுத்தப்பட்ட அமைப்புக்கும் எந்தவிதத் தேவையும் இல்லை.

✧

இளைஞர்களே! நீங்கள் எப்போதும் இளமையுடன் இருக்க வேண்டும். முதுமையடையாதீர்கள். உங்களுடைய உடலானது முதுமையடையலாம். உங்களுடைய மனம் முதுமை அடையக் கூடாது. உங்களுடைய மனம் இளமை

யாகவும், புதியதாகவும், கற்பதற்குத் தயாராகவும் இருந்து, வாழ்க்கையில் புதியவற்றைக் கண்டுபிடிக்கும் ஆற்றலுடன் இருக்குமானால் நீங்கள் வாழ்வதாகப் பொருள்படும்.

எப்போது உங்கள் மனம் புதியவற்றைக் கண்டுபிடிக்க இயலாத நிலையும், விரிவுபடுத்த இயலாத நிலையும் ஏற்படுகிறதோ அப்போது நீங்கள் மறைந்து விடுகிறீர்கள். நீங்கள் உங்களுடைய உடலை மேலும் இருபது முப்பது ஆண்டுகளுக்குக் கொண்டு செல்ல வேண்டும்.

✧

மற்றவர்கள் உங்களுடைய வாழ்க்கைக்கு உதவுவ தாகவும், ஆதாரமாக இருப்பதாகவும் பலவற்றைக் கூறலாம். யாரிடமிருந்தும் எதையும் ஏற்றுக் கொள்ளாதபடி நீங்கள் இருந்தால் நீங்கள் என்றும் இளமையுடன் இருக்க முடியும்.

இளமை என்பது உன்னுடைய வாளைக் கூர்மை யாக்கும் தன்மை கொண்டது. புனிதமிக்கதாகக் கூறப்படும் இதிகாச புராணங்களை நம்பாதீர்கள். ஏனெனில், அவற்றில் புனிதமிக்கதாக எதுவும் இல்லை. இவைகளைச் சிறப்புமிக்க இலக்கியங்களாகக் கூட எடுத்துக் கொள்ள முடியாது.

✧

நினைவில் வைத்துக் கொள்ள உங்களுடைய ஆரம்பம் என்பது நம்பிக்கையில் பிறக்கக் கூடாது. ஆனால், ஆரோக்கியமான சந்தேகத்தில் எழலாம்.

சந்தேகம் என்பதை நம்பக் கூடாதது என்று எண்ணக் கூடாது. சந்தேகம் என்பதைச் சாதாரணமாக எடுத்துக் கொள்ள வேண்டும். ''எனக்குத் தெரியவில்லை. ஆனால்,

விசாரிக்கிறேன், சரியா தவறா என்று சொன்னால் முடிவெடுக்க முடியவில்லை.''

சந்தேகம் என்பது இளமையானது. நம்பிக்கை என்பது முதுமையானது. விசாரிப்பதில் ஒருவன் தளர்ந்துபோனால் எதையும் நம்பும் நிலையில் இருக்கிறான் என்று அர்த்தம்.

✧

உன்னால் இயன்ற எல்லாவற்றையும் செய்துவிட்டதாக நீ எண்ணி திருப்தியடையலாம். அவை உன்னுடைய சுயமானவையாகும். இது என் சொந்த அனுபவம். நீ உன்னுடைய சொந்த முகத்தைக் காட்டு. அதுவே இந்த உலகத்தில் உள்ள மிகப் பெரிய மகிழ்ச்சியாகும். ஆனால், எல்லாருமே முகமூடி அணிந்து கொண்டிருக்கிறார்கள். சிலர் இந்துமதம் என்னும் முகமூடியும், சிலர் இஸ்லாம் என்னும் முகமூடியும் அணிந்திருக்கிறார்கள்.

ஓர் இளைஞன் எல்லா முகமூடிகளையும் எதிர்ப்பதாக இந்த உலகத்திற்குக் கூற வேண்டும். நான் தனித்தன்மையோடு இருக்கப் போகிறேன். நான் நன்றாகவே இருப்பேன். நான் யாரையும் பின்பற்றமாட்டேன் என்று ஓர் இளைஞன் கூற வேண்டும்.

✧

இளைஞர்கள் ஆரோக்கியமாக வாழ வழிவகை தேட வேண்டும். பல நூற்றாண்டுகளாகத் தேவை இல்லாமல் செல்வத்தைக் குற்றமாகக் கருதி வந்துள்ளனர். மற்றப் பொருட்களை உற்பத்தி செய்வதைப்போல செல்வத்தை உற்பத்தி செய்ய வேண்டும்.

செல்வத்தை மதிக்க வேண்டும். சிலர் வண்ணம் தீட்டுவதை மதிக்கிறோம். சிலர் இசை அமைப்பதை மதிக்கிறோம். ஆனால், செல்வத்தை மட்டும் 'சிக்கனம்' என்று கூறி கண்டிக்கின்றோம்.

நீ ஏழ்மையை அழிக்க விரும்பினால் செல்வச் செழிப்பை மதிக்க வேண்டும்.

✧

இளைஞர்கள் எல்லாவித இலக்கணங்களையும் மாற்ற வேண்டும். செல்வத்தை நாம் மதிக்க வேண்டும். அதை ஈட்ட வேண்டும். அதாவது, 'பிகாசோ'வைப்போல, 'ஃபோர்டு'போல செல்வத்தை ஈட்ட வேண்டாம்.

தற்போதுள்ள வசதிகளுக்கேற்ப செல்வத்தை ஈட்ட நீங்கள் ஊக்குவிக்க வேண்டும். மாறாக விரக்தி, போராட்டங்கள், சண்டைகள், கற்களை வீசுவது போன்றவற்றில் நேரத்தை வீணாக்குவது, பஸ்களை அடித்து நொறுக்குவது, போன்றவற்றில் ஆற்றலை இழப்பதற்குப் பதிலாக இந்த நாட்டைச் சொர்க்கமாக்க ஆற்றலைச் செலவிட வேண்டும்.

✧

எனக்கு ஒரு அரைகுறை வேலை செய்யப் பிடிக்காது.

✧

உங்களுக்குத் தெரியாத ஒன்றுடன் நீங்கள் சண்டையிட முடியாது.

✧

*நீங்கள் உணர்வு நிலையுடன், விழிப்புடன், தெரிநிலையாயுள் ஆன உடனே உணராத் தன்மையின் இருள் மறைந்து போகிறது.*

◇

*மனதிற்கு முரண்பாடு மட்டுமே தெரியும். முரண்பாடு இல்லாத இடத்தில்கூட, மனம் அதை உருவாக்கும். பிரச்சனை இல்லாத இடத்தில்கூட மனம் அதை உருவாக்கும்.*

*மனதால் பிரச்சனைகள் இல்லாமல் இருக்க முடியாது. அதன் உணர்வூட்டமே பிரச்சனைகள்தான். முரண்பாடு, சண்டை, இணக்கமற்ற தன்மை - பணம் இவற்றோடு வெகு சுகமாக உணர்கிறது. மௌனம், இணக்கம் - மனம் பாடுபடத் தொடங்குகிறது. ஏனென்றால், இணக்கம், மௌனம் மற்றும் அமைதி எல்லாமே மனதிற்கு மரணம்.*

*எனவே, உங்கள் பிரச்சனையை மனதைவிட்டு மாற்றுங்கள். வாழத் தொடங்குங்கள்.*

◇

*அற்புதங்கள் எல்லா இடங்களிலும் உள்ளன. இதைக் கவனிக்க ஒரு உணர்வுள்ள இதயமும், பார்க்கும்திறன் கொண்ட கண்ணும் மட்டுமே தேவை. அப்போது பொருளும் உயிரும் எங்கெங்கிலும் ஒன்றாக நடனமாடிக் கொண்டிருப்பதை நீங்கள் காண்பீர்கள்.*

◇

குறட்டை விடுவது ஒரு கலை.

பிளாட்பாரத்தைப் பொறுத்தவரையில், நீ பிளாட் பாரத்தில் இல்லை. நீ இரயில்மீது தூங்கிக் கொண்டிருக் கிறாய்.

எனவே, கவலைப்படத் தேவையில்லை. இரயில் உன்னை எடுத்துச் செல்கிறது. அதனால்தான் நீ உள்ளே வரும் இரயில்களின் விசில் சத்தத்தைக் கேட்பதில்லை.

முழுமையாகக் குறட்டை விடு, நன்றாகத் தூங்கு, இரயில் வேகமாகச் செல்கிறது.

தமது வாழ்க்கையில் சாதனை புரிபவர்களாக இருந்து வந்துள்ளவர்களின் பிரச்சனைகளில் இது ஒன்று - அவர்கள் என்னவெல்லாம் விரும்பினார்களோ அதையெல்லாம் அவர்கள் சாதித்தார்கள். எது அவர்கள் இலக்கோ அதை அடைந்தார்கள்.

ஆனால், ஞானம் ஒரு இலக்கு அல்ல. கடவுள் ஒரு சாதனை அல்ல. கடவுள் உங்களது உண்மை நிலை. நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் ஓய்வாக இருக்க வேண்டியது தான்.

அதனால்தான் நான் மிகச் சரியாகக் குறட்டைவிடச் சொல்கிறேன். இவ்வாறு எழுந்து, இரயில் வந்துவிட்டதா இல்லையா என்று கவனிப்பது கெடுக்கிறது. உனது ஓய்வைத் தொந்தரவு செய்கிறது.

எனது சந்நியாசிகள் இலக்கைக் குறி வைக்கும் நபர்கள் அல்லர். எனது முழு அணுகுமுறையும் விட்டுவிடுதல் பற்றியது; அது முயற்சி பற்றியது அல்ல. நீ சும்மா ஓய்வாக

இருந்து மகிழ்வு கொள். சொற்பொழிவின்போது கூடத் தூங்குவது தடுக்கப்பட்டதல்ல; குறட்டை விடுவதும் தடுக்கப்பட்டதல்ல.

கொஞ்சம் இசையுடன் குறட்டை விடு; அதை எல்லோரும் இரசிக்கலாம்.

நீ எதுவும் செய்ய வேண்டியது அல்ல. அடுத்தது என்ன என்று கேட்காதே. நீ முழுமையாக ஓய்வு பெற வேண்டும். இதனால் உனது உயிருருவை அதன் ஒளிவிடும் மகிமையில், அதன் பேரானந்தத்தில், அருளாசியில் உணர முடியும்.

நீ எங்கே இருக்க வேண்டுமோ அங்கே ஏற்கெனவே இருக்கிறாய் என்று நான் உனக்குச் சொல்லுகிறேன். நீ என்னவாக உண்டாக வேண்டும் என்று எண்ணிக் கொண்டிருக்கிறாயோ அதுவாக நீ ஏற்கெனவே இருக்கிறாய்.

✧

உண்டாவது என்பது ஒரு வியாதி. நீ ஒரு உயிருரு. நீ எதுவும் ஆக வேண்டாம். ஆனால், உனது வாழ்நாள் முழுவதும் நீ ஒரு கடின உழைப்பாளியாக இருந்து கொண்டு, நீ விரும்பியவற்றையெல்லாம் சாதித்துக் கொண்டு இருந்ததால் அந்தப் பழைய வழக்கம் தியானத்தையும் ஒரு முயற்சியாக, ஞானத்தையும் ஒரு இலக்காக, கடவுளையும் வேறு எங்கேயோ வைத்துள்ளது.

✧

இந்தப் பரந்த உலகில், ஏன் இத்தனை மனிதர்கள் உண்மையைத் தவற விடுகிறார்கள்?

ஏன் இத்தனை சிறிய எண்ணிக்கையிலான மனிதர்கள் உண்மையை, அழகை, பேரானந்தத்தை உணர்ந்து கொள்

கிறார்கள்? இதன் காரணம் எளிது. எல்லோரும் இலக்கு களைத் தொடர்பு வைத்துச் சிந்தித்துக் கொண்டிருக்கிறார்கள். மேலும் அவ்வாறு இலக்குகளைத் தொடர்பு வைத்து எண்ணிக் கொண்டிருப்பவர்கள் தோல்வியடையப் போகிறார்கள்.

ஏனெனில், அது ஒரு இலக்கு அல்ல. அது ஏற்கெனவே உங்களுக்குள் இருக்கிறது. எனவே, அதைப் பெற நீங்கள் அதிகமாய் ஓட ஓட நீங்கள் அதைவிட்டு வெகுதொலைவில் விலகிச் செல்கிறீர்கள்.

தன்னிடமே வருவது ஒரு பயணமல்ல. அது எல்லா முயற்சிகளையும், இலக்குகளையும், உண்டாவதையும் துறந்து விடுவது ஆகும். நீங்கள் எங்கே இருக்கிறீர்களோ, என்னவாக இருக்கிறீர்களோ அதுவாக சும்மா இருங்கள். இது மிகவும் எளிதான ஒரு செயல். ஆனால், பார்ப்பதற்கு வெகு கடினமாகத் தோன்றுகிறது. ஏனெனில், நாம் இலக்கு களுக்குப் பயிற்சியளிக்கப்பட்டுள்ளோம்.

நீ செய்ய வேண்டியது எதுவும் இல்லை. நீ செய்ய வேண்டியது எல்லாம், மௌனமாக அமர்ந்து ஒன்றும் செய்யாமல் இருப்பதுதான், வசந்தம் வருகிறது, புல் தானாகவே வளருகிறது.

இயற்கையிலே, புல் எந்த விசில் சப்தமும் எழுப்புவ தில்லை. அது சும்மா வளர்கிறது. அது ஒரு இரயில் நிலையம் இல்லை.

மேலும், புல் வளர்ந்து கொண்டுதான் இருக்கிறது. ஆனால், நீ அதைத் தினமும் பார்த்தபோதிலும், அது வளர்ந்து கொண்டுதான் உள்ளது என்பதை நீ உணரமாட்டாய்.

✧

*நீங்கள் எல்லோரும் வளர்ந்து கொண்டு இருக்கிறீர்கள். உங்கள் வளர்ச்சி ஒரு வெடிக்கும் கட்டத்தை அடையும் போதுதான் நீங்கள் அதை உணருவீர்கள். அப்போது அது வளர்ச்சியில்லாமல் சாத்தியப்படாத ஒன்று என்று புரியும்.*

*நீங்கள் தினமும் வளர்ந்து கொண்டே இருக்கிறீர்கள். ஒரு சிறு பிள்ளையிலிருந்து இளைஞனாக, இளைஞனி லிருந்து முதியவனாக. ஆனால், இளைஞனாக மாறத் தொடங்கிய புள்ளியையோ, முதியவனாக மாறத் தொடங் கிய புள்ளியையோ உங்களால் கண்டுபிடித்துச் சொல்ல முடியாது. ஏனெனில், நீங்கள் உங்கள் வளர்ச்சிக்கு மிக அருகில் இருக்கிறீர்கள். அது தினமும் மிக மெதுவாக நடைபெறுகிறது.*

✧

*எங்காவது, யாராகவோ இருக்க விரும்பும் மனிதர்கள் தான் தோல்வியின் வருத்தத்தை ஏற்றுக் கொள்கிறார்கள். ஆனால், யாராகவும் இருக்க விரும்பாத, வேறு எங்கேயும் போக விரும்பாத ஒரு மனிதன் தோல்வியின் வருத்தத்தைச் சுமக்க வேண்டியதில்லை. அவன் எப்போதுமே வெற்றியுடன் இருக்கிறான் - என்னைப்போல.*

*எனது சிறுபிள்ளை வயதிலிருந்து, எனது பெற்றோர் எனது ஆதரவாளர்கள், எனது ஆசிரியர்கள் எல்லாருமே, ''நீ எதற்கும் லாயக்கில்லாத உபயோகமற்ற ஒரு பயலாக வரப் போகிறாய்'' என்று சொல்லி வந்தனர்.*

*''அதுதான் என் தலைவிதி என்றால், நான் முற்றிலும் மகிழ்ச்சியுடன் இருக்கிறேன். நான் ஏன் வேறு யாராகவோ இருக்க வேண்டும்? முற்றிலும் உபயோகமற்றவனா? மிகவும் நல்லது! எதற்கும் லாயக்கற்றவனா? அதில் ஏதும்*

தவறு இருப்பதாக எனக்குத் தெரியவில்லை'' என்று நான் கூறினேன்.

அவர்கள் கூறுவார்கள்: ''உன்னால் அர்த்தத்துடன் பேசவே முடியாதா?''

''அது அர்த்தம் எது என்பது பற்றியது. என்ன நடக்கப் போகிறதோ, நான் வெற்றிகரமாக இருக்கப் போகிறேன். ஏனெனில், இதுதான் நடக்க வேண்டும் என்று ஒரு திட்டம் செய்து வைத்துக் கொள்ளவில்லை. அப்போதுதான் நான் வெற்றியுடன் இருப்பேன் என்று எண்ணவில்லை. இது அதற்கு நேர்மாறானது. நான் வெற்றிகரமாக இருப்பேன். என்ன நடந்தாலும் அது விஷயமல்ல; என் வெற்றி நிச்சயம்'' என்று நான் கூறுவேன்.

✧

நான் ரசித்து மகிழாத எதையும் நான் செய்வதில்லை.

✧

கடவுள் என் பின்னால் இருக்கிறார். அவர் என்னை ஸ்டார்ட் செய்கிறார். ஒருமுறை என்னை ஸ்டார்ட் செய்துவிட்டால் எல்லாம் நன்றாக நடக்கிறது.

✧

வாழ்க்கையில் தோல்வி என்பது கிடையாது. நீ விஷயங்களை எவ்வாறு எடுத்துக் கொள்கிறாயோ அதைப் பொறுத்துத்தான் எல்லாம் இருக்கிறது. நீ நிறைய விரும்பினால் - அதில் உயரத்தை எட்ட விரும்பினால் - உன்னால் அது முடியாவிட்டால், ஏமாற்றமும் தோல்வியும் இருக்கின்றன.

ஆனால், எதையும் விரும்பாமல், நீ எங்கேயிருந்தாலும் மிகவும் மகிழ்ச்சியாக இருந்தால், வாழ்க்கை நிமிடத்திற்கு நிமிடம் வெற்றியாக உள்ளது.

✧

துன்பங்களின் காரணங்கள், அழகிய வார்த்தைகளுக்குப் பின்னால், புனித வேதங்களுக்குப் பின்னால், ஆன்மிகப் பேருரைகளுக்குப் பின்னால், மறைக்கப்பட்டிருக்கின்றன!

✧

ஒருவனிடம், ஒன்றைச் செய்ய வேண்டாம் என்று சொன்னால், அது, அவன் ஆவலைத் தூண்டி, அதைச் செய்யச் செய்யும்!

✧

இந்த உலகில் இருவகையான துயர மனிதர்கள் இருக்கிறார்கள். ஒரு வகையினர், மத தீர்க்கதரிசிகளைப் பின்பற்றுவோர். மற்றொரு வகையினர், அவர்களைப் பின்பற்றாதவர்கள்.

என்னைப்போல மூன்றாவது வகையினரைக் காண்பது சிரமம். நான் எதற்கும் கவலைப்படாதவன். அவர்களை நான் பின்பற்றுவதும் இல்லை; எதிர்ப்பதும் இல்லை. அவர்களை நான் வெறுப்பதும் இல்லை; அவர்களை ஆதரிப்பது என்ற பேச்சுக்கே இடமும் இல்லை.

✧

நீங்கள் ஒருவரை வெறுத்தால், உங்கள் வெறுப்பே உங்களை நெருப்பாய்ச் சுடும். நீங்கள் சினம் (கோபம்) கொண்டால், உங்கள் சினத்தினாலேயே நீங்கள் துன்பப்

படுவீர்கள். என் அணுகுமுறை என்னவென்றால், உங்கள் செயலின் கணத்திலேயே இதன் விளைவும் உடனடியாக உண்டாகும் என்பதுதான்.

✧

மனிதனின் துன்பங்களுக்குக் காரணம், மதங்கள், அவனது துன்பங்களுக்குக் காரணமானதை அழிக்க உதவாமற் போனதுதான்.

அதற்கு நேர்மாறாக, அவன் அப்படியே கிடந்து அழுந்தும்படி, அவனுக்கு ஆறுதல்களை மட்டுமே அவை வழங்கி வந்திருக்கின்றன.

✧

ஒன்றைத் தெளிவாகப் புரிந்து கொள்ள வேண்டும். வெறும் நம்பிக்கையில் ஒரு பயனும் இல்லை; பொய் விளக்கங்கள் நமக்கு எந்தவிதத்திலும் உதவா.

இந்தக் குப்பைக் கூளங்களையெல்லாம் தூக்கி வீசி எறிந்துவிட்டு, எதார்த்தநிலை என்ன என்பதைப் பார்க்க வேண்டும்.

✧

இந்த உலகம், இவ்வளவு மக்கள் தொகையைத் தாங்காது என்பது எதார்த்தம். இப்போது இருப்பதில் பாதியாக இது குறைந்துவிட வேண்டும். ஆனால், இருக்கும் நிலைமையைப் பார்த்தால், இப்படி வளர்ந்து கொண்டே போய், இந்த நூற்றாண்டின் இறுதியில் இரண்டு மடங்கு ஆகிவிடும். அப்போது நம் துன்பங்களும் இருமடங்காகி விடும்.

மக்கள் தொகையைப் பாதியாகக் குறைத்துவிட வேண்டும் என்றும் சொல்கிறேன். அதற்கு, புத்திசாலித் தனமும், புரிந்து கொள்ளுதலும் தேவை.

✧

ஆலயங்களுக்குப் போவதை நிறுத்துங்கள். அவர்கள் போதுமான அளவு உங்களை முட்டாளாக்கிவிட்டார்கள்.

அந்த ராபிகள், துறவிகள், பாதிரியார்களிடம் அறிவுரை கேட்பதை நிறுத்துங்கள். அவர்கள் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக வெறும் ஆறுதல் மொழிகளைத்தான் வழங்கி வந்திருக்கிறார்கள். அவை எல்லாம் மலட்டுச் சிந்தனைகள் என்பது நிரூபணமாகிவிட்டது.

நீங்கள் அரசியல்வாதிகளிடமிருந்தும், மதவாதிகளிட மிருந்தும் விலகி, விஞ்ஞானிகள் பக்கம் திரும்பிவிட வேண்டும்.

இந்தத் துயரங்களிலிருந்து விடுபட வேண்டுமானால், மனித சமுதாயம் முழுவதும் விஞ்ஞானத்தின் பக்கம்தான் பார்வையைச் செலுத்த வேண்டும்.

✧

வெளியிலுள்ள இந்த அறிவியல், உங்கள் துன்ப துயரங்களைத் தொண்ணூறு சதவிகிதம் குறைத்துவிடக் கூடியது என்பதை மறந்துவிடாதீர்கள். நீங்கள் உங்கள் தொண்ணூறு சதவிகித துன்ப துயரங்களை நீக்கிவிட்டால் - பௌதிக, உடலியல், விஞ்ஞானம் எளிதாக அவற்றை நீக்கிவிடும்.

மீதமுள்ள பத்து சதவிகிதத் துன்பம் என்ன என்பது தெளிவாக உங்களுக்குத் தெரிந்துவிடும். அது, உங்கள்

தொண்ணூறு சதவிகித துன்பத்திற்குள், இப்போது மறைந்திருக்கிறது.

அப்போது நீங்கள் உங்கள் துயரங்களை எல்லாம் தெளிவாகக் காணமுடியும். அவையெல்லாம் இந்தப் பத்து சதவிகிதத்தோடு ஒப்பிடும்போது, ஒன்றுமில்லை. இந்தப் பத்து சதவிகிதம்தான் மிகுந்த துன்பம் தருபவை.

இதை, அகப்பார்வை மூலமாக மாற்றிவிட முடியும். தியானம், விழிப்புணர்வு, கவனமோடிருத்தல் என்று அதை எப்படி அழைத்தாலும் சரி.

ஆனால், இந்தப் பத்து சதவிகித துன்பம் அசாத்தியமான கனம் கொண்டது. மற்ற தொண்ணூறு சதவிகிதம் ஒன்றும் இல்லை. அது வெறும் பசி... உணவு, உடை, தொழில் முத லியன... இவற்றையெல்லாம் அறிவியல் சமாளித்து விடும்.

✧

சாமியாரை சுத்தமாக ஒதுக்கிவிடுங்கள். அவருக்கு எதிர்காலத்தில் எந்த வேலையும் இல்லை. அவர் ஏற்கெனவே ஏகப்பட்ட விஷமங்கள் செய்துவிட்டார்.

விஞ்ஞானத்தின்மீது கவனம் செலுத்துங்கள். ஒரு புதிய பரிமாணம், இதுவரை நீங்கள் உணர்ந்திராத ஒரு விழிப்புணர்வு, உங்களுக்குள் தோன்றும்.

ஒரு பசித்த மனிதன், வாழ்க்கைக்கு அர்த்தமுண்டா இல்லையா என்று எப்படி நினைத்துப் பார்க்க முடியும்? ஒரு மலரின் அழகைக்கூட அவனால் இரசிக்க முடியாது. பசி அவனிடம் இருக்கும்போது இசையைப் பற்றியோ, கவிதையைப் பற்றியோ, ஓவியத்தைப் பற்றியோ நீங்கள்

அவனிடம் பேசமுடியாது. அது அவனை அவமானப் படுத்துவது ஆகும். அது சுத்தமான அவமதிப்பு.

ஆனால், இந்தப் பிரச்சனைகள் எல்லாம் நீக்கிவிட்டால், அவன், வாழ்வில் முதன் முதலாக, எதார்த்தமான, உண்மை யான, தன் இருப்பைப் பற்றிக் கேள்விகள் கேட்க ஆரம்பித்து விடுவான். அதற்குப் பதில் சொல்ல அக விஞ்ஞானத்தால் முடியும்.

அதனால், மதத்திற்கு எதிர்காலமே இல்லை. ஆனால், புறவிஞ்ஞானத்திற்கு வருங்காலம் உண்டு. அது, புற வயமான பிரச்சனைகளுக்குத் தீர்வு காணும். அக விஞ்ஞானம், உங்கள் உள்ளார்ந்த அகச்சிக்கல்களைக் கவனித்துக் கொள்ளும்.

ஒன்று, உங்கள் உடல், உறுப்புகள் விஷயத்தைக் கவனித்துக் கொள்ளும். மற்றது, மனோவியல், உங்கள் உள் மையமான ஆன்மாவைக் கவனித்துக் கொள்ளும்.

✧

எல்லாத் தத்துவஞானிகளும், சத்தியத்தைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருக்கிறார்கள். அதை நினைப்பது முடியாத செயல். நீங்கள் அதை உணரலாம். அல்லது உணராமல் போகலாம். அவ்வளவுதான். நீங்கள் உண் மையை உணரவில்லை என்றால், அதைப் பற்றி எவ்வாறு சிந்திக்க முடியும்?

ஒரு தத்துவஞானி உண்மையைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருப்பது, கண் தெரியாதவன் ஒளியைப் பற்றி நினைத்துக் கொண்டிருப்பதுபோல. கண்கள் இருந்தால் ஒளியைப் பற்றி சிந்திக்கமாட்டீர்கள்; அதைப் பார்ப்பீர்கள்.

✧

பார்ப்பது ஒரு வித்தியாசமான முறை. அது தியானத்தின் பக்கவிளைவு.

அதனால்தான் நான், என் வாழ்வு முறையை தத்துவ ஞானம் என்று எப்போதும் கூறுவதில்லை. ஏனென்றால், அது தத்துவஞானத்தோடு, எந்தத் தொடர்பும் இல்லாதது. அதை நீங்கள் 'பிலோசியா' என்று அழைக்கலாம்.

✧

'பிலோ' என்றால் காதல்; 'சபி' என்றால் ஞானம், அறிவு ஞானத்திற்கான காதல் என்பது 'பிலாசபி'. 'பிலோசியா'வில் 'பிலோ' என்றால் அதே காதல்தான். 'சியா' என்றால் பார்த்தல். இது ஞானக்காதல் அல்ல. அனுபவக் காதல். அனுபவத்திற்கான காதல்.

அதனால், முதலில் இதை நினைவு கொள்ளுங்கள். அகிம்சை, மகாத்மாகாந்திக்கு ஒரு தத்துவம். அது எனக்கு ஒரு தத்துவமல்ல; அது 'பிலோசியா' அனுபவத்திற்கான காதல். இங்கேதான், நான் காந்தியத் தத்துவ ஞானிகளுடனும், சிந்தனையாளர்களுடனும் இடைவிடாமல் போராடிக் கொண்டிருக்கிறேன்.

✧

காந்தி தன் சுயசரிதத்தை, 'சத்தியசோதனை' என்ற தலைப்பில் எழுதினார்.

நீங்கள் மௌனமாக இருக்கும்போது, உண்மை அங்கே பூரணமாய், முழு மேன்மையும் ஒளி வீசும். உங்கள் மௌனம் கலையும்போது உண்மை அங்கே இருக்காது.

நீங்கள் மௌனமாக இருக்கையில், உண்மை ஒரு பொருளாய் உங்கள் முன் தோற்றமளிக்காது. உங்கள்

மௌனத்தில், சட்டென அதை அடையாளம் கண்டு கொள்வீர்கள்.

அங்கே பார்ப்பதற்கு எதுவும் இல்லை. பார்க்கிறவரே பார்க்கப்படுகிறார். கவனிப்பவரே கவனிக்கப்படுகிறார். அங்கே இருமை (இரண்டு தன்மை) என்பதே இல்லை.

அங்கே சிந்தனை என்ற பேச்சுக்கே இடமில்லை. சந்தேகம் இல்லை; அங்கே நம்புதலும் இல்லை; எந்த எண்ணமும் இல்லை.

✧

அகிம்சை என்ற சொல்லே எனக்கு நிறைவு தருவ்தாக இல்லை; என் சுவைக்கு ஏற்றதாக இல்லை. ஏனென்றால், அது ஒரு எதிர்மறைச்சொல். வன்முறை - நேரடியானது. அகிம்சை -எதிர்மறையானது. வன்முறையை உறுதியான உடன்பாடானதாகவும், அகிம்சையை - இம்சை அற்றது என எதிர்மறையாகவும் பயன்படுத்துவதைப்பற்றி யாரும் கவனித்ததாகவே தெரியவில்லை!

'வாழ்வின் மீதான மரியாதை' என்று அதை நான் குறிப்பிட விரும்புகிறேன். அகிம்சை என்ற சொல்லை நான் பயன்படுத்துவதில்லை. 'வாழ்வின் மீதான மரியாதை' - இது உடன்பாடானது. அகிம்சை தன் சொந்தச் சம்மதத்தின்பேரில் நிகழ்வது மட்டுமே.

✧

அழுத்தமான நம்பிக்கைகளும், உயர்ந்த புத்திசாலித் தனம் அற்றவருமான மனிதர்கள் வேறு எவரையும்விட அபாயகரமானவர்கள். ஏனென்றால், அவர்களது நோக் கங்கள் குருட்டுத்தனமானவை.

✧

நாம் கண்களுக்குப் புலப்படாத மாயக் கயிறுகளால் பிணைக்கப்பட்டிருக்கிறோம். உங்களுக்கு நான் செய்யும் துன்பம், என்னையும் பாதிக்கும். என்னை நான் வருத்திக் கொண்டால், அது உங்களையும் வருத்துவதாகும்.

அந்த வேறுபாட்டை நீங்கள் தெளிவாகப் புரிந்து கொள்ள வேண்டும். மிகவும் நுட்பமானது அது. அகிம்சையை நம்புகிறவர் வேறு யாருக்கும் இம்சை செய்து விடாமல் கவனமாக இருக்க வேண்டும் - மிக மிகக் கவனமாக இருக்க வேண்டும்.

✧

மனம் எப்போதுமே ஒரே ஒரு விஷயத்தைப் பற்றித்தான் பயந்து கொண்டிருக்கிறது. அதுதான் உங்கள் இதயம். ஏனென்றால் அடிப்படையில் ஒரு வேலைக்காரனாக இருக்க வேண்டிய மனம், எப்படியோ எஜமானர் ஆகி விட்டது.

இதயமோ, எஜமானனாக இருந்திருக்க வேண்டியது, குறுக்கிடக் கூட அக்கறை எடுத்துக் கொள்ளாமல் மனதை எஜமானனாக இருக்க அனுமதித்துவிட்டது.

ஆனால், இதயம் எப்போது விரும்புகிறதோ, அப்போது தனது எஜமானத்தனம் போய்விடும் என்பது மனதிற்குத் தெரியும்.

எனவே, இதயம் எப்போதெல்லாம் ஏதாவது சொல்ல விரும்பும்போது, மனதில் பயம் எழுகிறது. மனதிற்கு அன்பைக் கண்டால் மிகவும் பயம். மனதிற்கு, நம்பிக்கையைக் கண்டால் மிகவும் பயம்.

மௌனத்தில், [illegible] அடையாளம் கண்டு கொள்கிறார்.

அங்கே பார்ப்பதற்கு எதுவும் இல்லை. பார்க்கிறவரே பார்க்கப்படுகிறார். கவனிப்பவரே கவனிக்கப்படுகிறார். அங்கே இருமை (இரண்டு தன்மை) என்பதே இல்லை.

அங்கே சிந்தனை என்ற பேச்சுக்கே இடமில்லை. சந்தேகம் இல்லை; அங்கே நம்புதலும் இல்லை; எந்த எண்ணமும் இல்லை.

✧

அகிம்சை என்ற சொல்லே எனக்கு நிறைவு தருவதாக இல்லை; என் சுவைக்கு ஏற்றதாக இல்லை. ஏனென்றால், அது ஒரு எதிர்மறைச்சொல். வன்முறை - நேரடியானது. அகிம்சை -எதிர்மறையானது. வன்முறையை உறுதியான உடன்பாடானதாகவும், அகிம்சையை - இம்சை அற்றது என எதிர்மறையாகவும் பயன்படுத்துவதைப்பற்றி யாரும் கவனித்ததாகவே தெரியவில்லை!

'வாழ்வின் மீதான மரியாதை' என்று அதை நான் குறிப்பிட விரும்புகிறேன். அகிம்சை என்ற சொல்லை நான் பயன்படுத்துவதில்லை. 'வாழ்வின் மீதான மரியாதை' - இது உடன்பாடானது. அகிம்சை தன் சொந்தச் சம்மதத்தின்பேரில் நிகழ்வது மட்டுமே.

✧

அழுத்தமான நம்பிக்கைகளும், உயர்ந்த புத்திசாலித் தனம் அற்றவருமான மனிதர்கள் வேறு எவரையும்விட அபாயகரமானவர்கள். ஏனென்றால், அவர்களது நோக்கங்கள் குருட்டுத்தனமானவை.

✧

நாம் கண்களுக்குப் புலப்படாத மாயக் கயிறுகளால் பிணைக்கப்பட்டிருக்கிறோம். உங்களுக்கு நான் செய்யும் துன்பம், என்னையும் பாதிக்கும். என்னை நான் வருத்திக் கொண்டால், அது உங்களையும் வருத்துவதாகும்.

அந்த வேறுபாட்டை நீங்கள் தெளிவாகப் புரிந்து கொள்ள வேண்டும். மிகவும் நுட்பமானது அது. அகிம்சையை நம்புகிறவர் வேறு யாருக்கும் இம்சை செய்து விடாமல் கவனமாக இருக்க வேண்டும் - மிக மிகக் கவனமாக இருக்க வேண்டும்.

✧

மனம் எப்போதுமே ஒரே ஒரு விஷயத்தைப் பற்றித்தான் பயந்து கொண்டிருக்கிறது. அதுதான் உங்கள் இதயம். ஏனென்றால் அடிப்படையில் ஒரு வேலைக்காரனாக இருக்க வேண்டிய மனம், எப்படியோ எஜமானர் ஆகி விட்டது.

இதயமோ, எஜமானனாக இருந்திருக்க வேண்டியது, குறுக்கிடக் கூட அக்கறை எடுத்துக் கொள்ளாமல் மனதை எஜமானனாக இருக்க அனுமதித்துவிட்டது.

ஆனால், இதயம் எப்போது விரும்புகிறதோ, அப்போது தனது எஜமானத்தனம் போய்விடும் என்பது மனதிற்குத் தெரியும்.

எனவே, இதயம் எப்போதெல்லாம் ஏதாவது சொல்ல விரும்பும்போது, மனதில் பயம் எழுகிறது. மனதிற்கு அன்பைக் கண்டால் மிகவும் பயம். மனதிற்கு, நம்பிக்கையைக் கண்டால் மிகவும் பயம்.

மனதிற்கு இதயம் தொடர்புள்ள எதைக் கண்டாலும் மிகுந்த பயம். ஏனெனில், மனதின் அதிகாரம் இயற்கையின் ஒரு பகுதி அல்ல. இதயம்தான் இயற்கையான எஜமான்.

ஆனால், பிரச்சனை இதுதான். இதயம் தனது அதி காரத்தைத் தெளிவாக, நிச்சயமாக உணர்ந்து இருப்பதால், அது தன்னைத் தானே நிலை நிறுத்திக் கொள்வதில்லை. அதற்குத் தேவையுமில்லை.

மனது என்பது எப்போது வேண்டுமானாலும் ஒதுக்கித் தள்ளப்படலாம் என்பது இதயத்தின் உள்ளூரத் தெரிந்த ஒன்று. மனதிற்குத் தான் ஒரு வேலைக்காரன்தான் என்பதும் மிகச் சரியாகத் தெரியும். எஜமான் ஒரு கனவானாக இருப்பதால், அவர் பணியாளைக் கூட எஜமான்போல பாவனை செய்ய அனுமதித்துள்ளார்.

ஆனால், ஒரு பணியாள் பணியாள்தான். எனவே, உங்கள் இதயம் ஏதாவது சொல்ல விரும்பும்போதெல்லாம் மனம் நடுங்கத் தொடங்கி விடுகிறது. அது இதயம் சுத்தமாகச் செத்துவிட வேண்டும் என்று விரும்புகிறது. அது மனிதன் முற்றிலும் இதயமற்றவனாக இருக்க வேண்டும் என்று விரும்புகிறது. மேலும் உலகெங்கிலும் அது மனிதர்களை இதயமற்று இருக்கச் செய்வதில் வெற்றி கண்டுள்ளது.

ஆனால், எப்போதாவது ஒருமுறை சில மனிதர்கள் மனதின் அடிமைத்தனத்திலிருந்து விடுபட்டு, தமது இதயங்களின் உரிமைகளை நிலைநாட்டத் தொடங்கு கிறார்கள். இதுதான் மிகச் சிறந்த பரிணாம வளர்ச்சி, மனதிற்கு எதிராக இதயத்தின் புரட்சி.

இதை நான் மிக அவசியமான சந்நியாசம் என்று அழைக்கிறேன்.

✧

ஒரு கடமையைக் கொண்டிருப்பதும், மதப்பிரசாரகனாக இருப்பதும் இரு வேறுபட்ட விஷயங்கள்.

மதப்பிரசாரகன் மனதிலிருந்து வேலை செய்கிறான். கடமை அல்லது குறிக்கோளைக் கொண்டிருப்பது இதயம் நிரம்பி வழிந்து ஓடுகின்ற ஒரு அனுபவத்தின் நிறைவு.

இந்த வேறுபாடு கண்டறியச் சற்றே கடினமானது. ஆனால், காண இயலாத ஒன்றல்ல. மதப்பிரசாரகன், தனக்குத் தானே முற்றிலும் நம்பிக்கை கொள்ளாத ஒன்று பற்றி மனிதர்களுக்கு நம்பிக்கையூட்ட முயலுகிறான்.

ஏனெனில், அவன் மனிதர்கள் நம்ப வேண்டும் என்று விரும்புகிற விஷயங்கள் அவன் அனுபவித்து அறியாதவை. ஒரு மதப்பிரச்சாரகன் என்பவன் சும்மா ஒரு அறிவை ஒரு தலைமுறையிலிருந்து மற்றொரு தலைமுறைக்கு மாற்றுகிற ஒரு கணிப்பொறி மாத்திரமே.

ஆனால், ஒரு குறிக்கோளைக் கொண்டிருப்பது என்பது முற்றிலும் மாறுபட்ட ஒரு விஷயம்.

✧

ஒரு குறிக்கோளைக் கொண்டிருப்பது என்றால், நீங்கள் ஒரு விஷயத்தை அனுபவித்து உள்ளீர்கள். அதைப் பிறருடன் பகிர்ந்து கொள்ளாமல் இருப்பது மனித நேயத்திற்கும் அன்பிற்கும் எதிராகச் செயல்படுவது ஆகும்.

அது யாரையும் மதம் மாற்றுகின்ற விஷயம் அல்ல. அது பகிர்ந்து கொள்ளும் ஒரு விஷயம். எனவே, அதில் அபாயம் ஒன்றுமில்லை. அது உங்களது அனுபவமாக இருந்தால் அதை வீட்டுக்கூரை முகடுகளிலிருந்து கூச்சலிட்டுச் சொல்லுங்கள். அது உங்கள் இதயத்திலிருந்து வருகிறது என்றால் அதைத் தடை செய்யாதீர்கள். ஏனெனில், நீங்கள் எவ்வளவு தூரம் பரப்புகிறீர்களோ, அந்த அளவு அதன் வேர்கள் ஆழமாகச் செல்லும்.

அது ஒரு மரத்தைப் போன்றது. மரம் தனது கிளைகளை வானிலே அகலமாகப் பரப்பிக் கொண்டே செல்கிறது. பூமிக் கடியில் அதன் வேர்களும் பரந்து கொண்டே செல்கின்றன.

பலரின் தாகத்தைத் தீர்க்கக்கூடிய ஒரு அனுபவம் உங்களிடம் இருந்தால், அதைத் துணிச்சலுடன் அபாயங் களை எதிர்கொண்டு கூவுங்கள், பாடுங்கள், நடனமாடுங் கள், உங்களால் என்ன செய்ய முடியுமோ அதைச் செய்யுங்கள்.

உலகமும் உங்களைப் பைத்தியக்காரன் என்று சொன் னாலும் கவலைப்படாதீர்கள். உங்களது அனுபவத்தை எவ்வளவு அதிகமாகப் பகிர்ந்து கொள்கிறீர்களோ, அந்த அளவு ஆழமாக அது உங்கள் இதயத்துக்குள்ளே சென்று அதிகப்பலம் பெற்று உங்கள் தனித்தன்மை ஒரு மகத்தான சக்தியாக மாறும்.

✧

என்னிடம் அகிம்சைத் தத்துவம் எதுவும் கிடையாது. என்னிடம் ஒரு வாழ்க்கை முறை இருக்கிறது. அதுதான் வாழ்வை மதிப்பது. இது முற்றிலும் ஒரு மாறுபட்ட பார்வை.

அகிம்சை, மற்றவரைக் கொல்லாதே என்று மட்டும் சொல்கிறது. இது போதும் என்று நினைக்கிறீர்களா? இது ஒரு எதிர்மறை வெளிப்பாடு; மற்றவரைக் கொல்லாதே, மற்றவர்க்குத் தீங்கு செய்யாதே. இது போதுமா?

வாழ்வை மதிப்பது என்பது, உங்கள் மகிழ்வை, உங்கள் அன்பை, உங்கள் சமாதானத்தை, உங்கள் பரவசத்தை எல்லாரும் பங்கிட்டுக் கொள்ளுங்கள் என்று சொல்கிறது. எதையெல்லாம் பங்கிட்டுக் கொள்ள முடியுமோ, அதைப் பங்கிட்டுக் கொள்ளுங்கள்.

✧

நீங்கள் வாழ்வை மதித்தால், அது ஒரு பிரார்த்தனையாகிவிடும். அப்புறம், எங்கும் கடவுளை உணர்வீர்கள். அப்புறம் ஒரு மரத்தைப் பார்ப்பதே பிரார்த்தனையாகி விடும். ஒரு விருந்தினரை உபசரிப்பதே வழிபாடாகி விடும்.

யாருக்காகவாவது நீங்கள் கட்டுப்பட்டுச் செய்வதல்ல. நீங்கள் தொண்டு செய்வதும் அல்ல. உங்கள் மகிழ்ச்சிக்காகச் செய்வது அது.

✧

நான் வாழ்வை மதிக்கிறேன். உங்கள் வாழ்வையும் சேர்த்துத்தான்.

உங்கள் வாழ்வை முதலில் நீங்கள் மதிக்கும்போதுதான் மற்றவரின் வாழ்வையும் நீங்கள் மதிக்க முடியும்.

உங்களை நீங்கள் நேசித்தால்தான், மற்றவர்கள்மீதும் உங்களால் அன்பு செலுத்த முடியும்.

வாழ்வை மதிப்பது, வன்முறையைத் தூண்ட அனு மதிக்காது. அது தானாகவும் வன்முறையைத் துவக்காது. வேறு யாராவது ஆரம்பித்தால், அது அதை உடனே தடுத்து நிறுத்திவிடும்.

✧

உங்களுக்கு நான், எந்தக் கடவுளின் பேரரசையும் தருவதாக வாக்குறுதி அளிக்கவில்லை. நீங்கள் எதையுமே சொந்தமாக இனி அடையப் போவதில்லை. ஏனென்றால், அது ஏற்கெனவே உங்களிடம்தான் இருக்கிறது. அதுதான் உங்களின் வாழ்க்கை. அதை நேசியுங்கள். அதற்கு மரியாதை செலுத்துங்கள்.

மற்றவர்களை நேசியுங்கள்; மதியுங்கள். மற்றவர் களைத் தாழ்த்தாதீர்கள்.

✧

நீங்கள் மற்றவரை அவமதிப்பது என்பது, மற்றவரிடம் குற்றமனப்பான்மையை உருவாக்கி விடுகிறது.

✧

யாருக்கும் எந்தத் தீங்கும் செய்யாதீர்கள். எவரும் உங்களுக்குத் தீங்கிழைக்கவும் அனுமதிக்காதீர்கள். அப்போதுதான் ஒரு மானிட உலகை நம்மால் உருவாக்க முடியும்.

✧

உங்கள் சொந்த விருப்பத்தின்படி எப்போதும் வன்முறையில் ஈடுபடாதீர்கள். அதே சமயம், மற்றவர்கள் உங்கள்மீது வன்முறை செலுத்தவும் எப்போதும்

அனுமதியாதீர்கள். அப்போதுதான், ஒரு மனிதாபிமான உலகை உருவாக்கும் சாத்தியம் உண்டாகும்.

✧

தேர்தலில் வெற்றி பெற விரும்புகிற அரசியல்வாதி ஒரு காரியம் செய்தால் போதும். அவர் நமக்கு எதிராக மடத்தனமாக உளறினால் போதும் - அவர் நிச்சயம் வெற்றி பெற்று விடுவார். எல்லா அரசியல்வாதிகளும் இதைச் செய்து வருகிறார்கள்.

✧

அரசியல் ஒரு விநோதமான தொழில். சில விஷயங்கள் அதைப் பற்றிப் புரிந்து கொள்வது நல்லது. அவை, மனித மனங்களின்மீது வெளிச்சம் வீசக் கூடியவை. முதலாவதாக, சிலவகை மனிதர்கள்தாம் அரசியலில் கவரப்படுகிறார்கள். சிலருக்குத்தான் அறிவியல்மீது, கவிதை, ஓவியம், இசை, நடனம் முதலியவற்றின்மீது கவர்ச்சி ஏற்படுகின்றது.

சில விஷயங்கள், எந்த வழிமுறைகளுக்கும், உத்திகளுக்கும், தந்திரங்களுக்கும் கட்டுப்படுவதில்லை. அவை எப்படியோ நிகழ்கின்றன.

நீங்கள் சும்மா அதை நிகழவிட்டால் போதும். அதை 'நிகழவிடுவது', என்பது, அதில் குறுக்கிடாமல் இருப்பது. நீங்கள் அதில் இருக்கக் கூட மாட்டீர்கள். நீங்கள் அங்கே, அதில் இருப்பதான உணர்வே, ஒரு இடையூறுதான்!

✧

சில பிறவிக் கவிஞர்கள் இருக்கிறார்கள். சில பிறவி நடனக்காரர்கள் இருக்கிறார்கள். சொல்லப்போனால்,

ஒவ்வொருவரும் ஏதாவது ஒன்றிற்காகப் பிறக்கிறார்கள். எதற்காக என்று கண்டுகொள்கிறவர்கள், உலகத்திலேயே ஆனந்தமயமான மனிதர்கள். தங்களுக்குத் தொடர்பில்லாத துறையை நோக்கிச் செல்ல ஆரம்பிப்பவர்கள் பரிதாபத்திற்கு உரியவர்கள்.

அரசியல்வாதிகள் அப்படிப்பட்டவர்கள். குற்றவாளி களும் அப்படிப்பட்டவர்களே. குற்றவாளிகள் அரசியல் வாதிகளாக வெற்றி பெற முடியாது. இருவரும் அதிகாரம் தேடுகிறவர்கள். இருவரும் அதிகார மமதைக்கு ஆட் பட்டவர்கள்.

அரசியல்வாதிகள் சட்டபூர்வமாக, அரசியல் விதிகளின் படி அதிகாரத்தை அடைய முயல்வார்கள். அதிகாரம் கைக்கு வந்தவுடனே, சட்டத்தையும், அரசியல் விதிகளையும் ஆயிரம்விதமாக, தமக்குச்சாதகமாகத் திரித்துக் கொள்வார்கள்.

அதிகாரம் பெற்றவுடனே, எல்லாவற்றையும் ஊழ லாக்கி, விபசாரத்தன்மை கொண்டதாக மாற்றி விடுவார்கள். அதிகாரம் கிடைக்கும் வரைதான், அவர்கள் நீதி, நேர்மை சட்டப்படி நடந்து கொள்வார்கள்.

குற்றவாளிகளும் அதிகாரம் தேடிச் செல்கின்றவர்களே. ஆனாலும், அரசியல் சட்டம், நீதி, தர்ம வழிகளில் செல்வது எப்படியென்று அவர்களுக்குத் தெரியாது. அரசியல் வாதியைப்போல் அவர்கள் கட்டுப்பாடாக இருக்க மாட்டார்கள். மிகவும் கடுமையாக நடந்து கொள்வார்கள். அரசியல்வாதியைப்போல் பண்பட்டவர்களாக இருக்க மாட்டார்கள். பண்பாட்டை அரசியல்வாதி படிக்கட்டு களாகப் பயன்படுத்திக் கொள்வார்.

✧

குற்றவாளிக்கு அரசியல்வாதியைப் போன்ற பேச்சுத் திறமை கிடையாது. பேச்சுத்திறன், அரசியல்வாதிக்கு ஆதாரமான கலை. அதன் மூலமாகத்தான் அவர், உங்கள் நம்பிக்கைகளை வெளிப்படுத்துவார்; அதை உங்களுக்கான வாக்குறுதிகளாக மாற்றி விடுவார். அவர் உங்கள் மனசாட்சியைக் கண்டுபிடித்து விடுவார்.

உங்கள் பிரக்ஞையற்ற கனவுகளையும், நம்பிக்கை களையும், எதிர்கால வாக்குறுதிகளாக மாற்றி விடுவார். அவருக்கு நீங்கள் அதிகாரம் தந்தால், அவற்றையெல்லாம் நிறைவேற்றி விடுவதாக நம்ப வைத்து விடுவார்... அது ஒரு வியாபாரம். கொடுக்கல் வாங்கல். நீங்கள் அதிகாரம் தருகிறீர்கள். அவர் பதிலுக்கு, உங்களுக்கு சொர்க்கத்தைத் தந்துவிடுவார்.

அவருக்கு நீங்கள் அதிகாரம் வழங்கிவிட்டீர்களானால், அப்புறம் உங்களைப் பற்றி ஏன் கவலைப்பட வேண்டும்? உங்களுக்கு வாக்குறுதி தரும்போது அவர் அதிகாரமற்ற மனிதர். இப்போது அவர் முற்றிலும் மாறுபட்டவராக மாறிவிட்டார். அவர் சக்தியுள்ளவராகிவிட்டார்.

அதிகாரம் ஊழலை உண்டாக்குகிறது. பூரண அதிகாரம் பூரண ஊழலை உண்டாக்கி விடுகிறது.

✧

அதிகாரம் உங்களுக்குக் கிடைத்தவுடனே, உங்கள் பிரக்ஞையற்ற மனதிற்குள் ஒளிந்து கொண்டிருந்த எல்லா ஊழல் மனோபாவங்களும் தலைதூக்க ஆரம்பித்துவிடும். அப்புறம் மற்றவர்களைப் பற்றி என்ன கவலை? அந்த வாக்குறுதிகள் எல்லாம் நேர்மையான உள்ளத்தோடு வழங்

கப்பட்டவை அல்ல. அதை நிறைவேற்றப் போவதில்லை என்று தெரிந்தே வழங்கப்பட்டவை.

அதிகாரம் பெறுவது என்பது ஒரு கொள்கை. அது கிடைத்து விடுகிறது. அப்புறம் உங்கள் பிரக்ஞையற்ற மனதின் ஆசைகள் இருக்கின்றனவே, அவற்றை நிறை வேற்றிக் கொள்ள வேண்டியதுதான்!

✧

உங்களுடன் யாரும் இல்லை. நீங்கள் தனியாக இருக்கிறீர்கள். இந்தத் தனிமை விலைமதிப்பற்றது. இதை நீங்கள் இழந்துவிடக் கூடாது என்பதை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும்.

நீங்கள் உறவுகளே கொள்ளக் கூடாது என்பதல்ல பொருள். அந்த உறவுகளை நீங்கள் நம்ப வேண்டாம் என்பதுதான் நான் சொல்வது. இந்த இரண்டிற்கும் இடையிலுள்ள வித்தியாசத்தை நீங்கள் கண்டுகொள்ள முயலுங்கள்.

உறவு என்பது பாயும் ஆறு. நீங்கள் உறவுகள் கொள்ளலாம். நீங்கள் உறவு கொள்ளலாம் என்பதற்குக் காரணமே நீங்கள் தனியாக இருப்பதால்தான். நீங்கள் தனிமனிதர். உங்களுடன் உறவு கொள்ள யாராவது ஒருவர் வெளியே உங்கள் பக்கம் இருக்கிறார். தன் தனிமையை உணர்ந்து கொண்டிருப்பவரிடம்தான் நீங்கள் உறவு கொள்ள முடியும். இல்லாவிட்டால் முடியாது.

❁



# ஓஷோ

## வாழ்க்கை வரலாறு

**ஆ**ன்மிகத்துறையில் உலக சாதனை படைத்தவர் ஓஷோ. இவருடைய இயற்பெயர் ரஜனீஷ். உலகம் முழுவதும் இவருக்கு ஐந்து இலட்சம் சீடர்கள் இருக்கிறார்கள். அவர்கள் அனைவரும் சாதாரணமானவர்கள் அல்லர். தொழில், விஞ்ஞானம், மருத்துவம், அரசியல் முதலிய பல்வேறு துறைகளில் சிறப்பிடம் பெற்றவர்களாவர். இவர்கள் யாவருமே பகவான் ரஜனீஷ் அவர்களை விரும்பி குருவாக ஏற்றுக் கொண்டவர்கள் ஆவர்.

பகவான் ரஜனீஷ் 1931ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 11ஆம் நாள் மத்தியபிரதேசத்தில் ஜபல்பூருக்கு அருகே உள்ள கச்வாடா என்ற கிராமத்தில் பிறந்தார். இவருடைய பெற்றோர் ஜைனப் பிரிவைச் சேர்ந்தவர்கள் ஆவர்.

ரஜனீஷ், ஜபல்பூர் பல்கலைக்கழகத்தில் இளங்கலைப்பட்டமும், சவுகார் பல்கலைக்கழகத்தில் முதுகலை பட்டமும் பெற்றவர்.

மகாகவுசல் கலைக் கல்லூரியில் இவர் விரிவுரை யாளராகப் பணியாற்றியுள்ளார். ஜபல்பூரில் உள்ள பன்வர்தலால் பூங்காவில் உள்ள மல்சாரி மரத்தின் கீழ் ரஜனீஷ் அடிக்கடி அமர்ந்து தியானம் செய்தார். இந்த மல்சாரி மரத்தடியில்தான் இவர் ஞானம் பெற்றார் என்று கூறப்படுகிறது.

ரஜனீஷ், உபநிஷத்துகளையும், ஃபிராய்ட், லாவோட்ஸ், புத்தர், மகாவீரர் - போன்றோரின் போதனை களையும் ஆழமாகக் கற்றறிந்தவர் ஆவார்.

1970ஆம் ஆண்டிலிருந்து சீடர்களை ஏற்று சன்னியாசம் தரத் தொடங்கிய ரஜனீஷ், ஆன்மிகப் புரட்சியை உலக அளவில் 11 ஆண்டுகளில் செய்து காட்டினார்.

1971ஆம் ஆண்டு புனே நகரில் 4 ஏக்கர் நிலப்பரப்பில் ரஜனீஷ் ஆசிரமம் தொடங்கப்பட்டது. அதுதான் 'ஓஷோ கம்யூன் இன்டர்நேஷனல்' என்பதாகும். இங்கே ஓஷோவின் முன்னிலையில் ஆயிரக்கணக்கானோர் வந்து தியானத்தின் ஆழ்நிலையைத் தொட்டிருக்கின்றனர். இன்றும் உலகின் பல பகுதிகளிலிருந்தும் மக்கள் இங்கே வருகை தந்து, இந்நிலையத்தின் சூழலில் தியானத்தின் இன்பத்தை அனுபவித்தவாறு உள்ளனர்.

1981ஆம் ஆண்டு அமெரிக்காவில் ஆரகன் பகுதியில் 64 ஆயிரம் ஏக்கர் நிலப்பரப்பில் உலகிலேயே சிறந்த, அனைத்து வசதிகளும் கொண்ட, ரஜனீஷ்புரம் நிறுவப் பட்டது. இங்கு உலகின் எல்லா நாடுகளையும் சேர்ந்த 5000 சீடர்கள் வந்து தங்கினார்கள். ரஜனீஷுக்கு அன்பளிப்பாக உலகிலேயே விலை உயர்ந்த 92 ரோல்ஸ்ராய்ஸ் கார்களை அவருடைய

பக்தர்கள் வழங்கினர். இந்திய துறவியான ரஜனீஷின் வளர்ச்சி அமெரிக்க நாட்டையே அதிர வைத்தது.

அமெரிக்காவில் ரஜனீஷ், அங்கு வேரூன்றி இருந்த மதத்துடன் மோதியதால் எதிர்ப்பையும் தேடிக் கொண்டார்.

உலகில் எங்கும் இல்லாத அளவில் மத்திய குளிர் வசதியுடன் ஆசிரம நகரம் அமைக்கப்பட்டதுடன், இதற்கென்று நகரசபையும், காவல்படையும் உருவானது. அவருடைய வளர்ச்சியைக் கண்டு பயந்த அமெரிக்க அரசு, அவருக்குப் பல தொல்லைகள் கொடுத்தது. இதனால் ஓஷோ இந்தியாவிற்குத் திரும்பினார்.

ரஜனீஷ் (ஓஷோ) மதவெறியர் அல்லர். அவர் எல்லா மதங்களிலும் உள்ள உண்மைகளை ஒப்புக் கொண்டார். ஆனாலும் மற்ற மதத்தலைவர்களிடம் உள்ள குறைகளை பகிரங்கமாகவே வெளிப்படுத்தினார்.

''மனதில் இறங்காமல், வெறும் எண்ணங்களாகவே முளைக்காமல் நின்றுவிடும் தத்துவங்களுக்கும், நூல் நிலையங்களில் படிக்காமல்விடப்படும் புத்தகங்களுக்கும் வித்தியாசம் இல்லை'' என்று கூறினார் அவர்.

ஓஷோ மனோதத்துவம், மனோவசியம் முதலிய வற்றை ஆழமாக அறிந்தவர். பல அரிய தத்துவங்களை, மனதின் தன்மைகளை அனுசரித்து ஆழமாக விதைக்க வழிகாட்டி உள்ளார்.

அவருடைய சொற்பொழிவுகளால் வாழ்க்கையில் தொடப்படாத எந்த எல்லையும் கிடையாது. யோகா, தந்த்ரா, ஸென், சூஃபி போன்ற தனிப்பட்ட சாதகங்கள்மீது,

பரம்பரையின் புரிந்துகொள்ள முடியாத இரகசியங்கள் மீது, அவர் மிகவும் தெளிவான பதிலைத் தந்துள்ளார்.

சீடர்கள், சாதகர்களுக்கு மத்தியிலே அவரால் நிகழ்த் தப்பட்ட சொற்பொழிவுகள் அறுநூற்று ஐம்பதுக்கும் அதிகமான புத்தக வடிவில் வெளிவந்துள்ளன. முப்பதுக்கும் மேலான அயல்மொழிகளில் அவை மொழி பெயர்க்கப்பட்டுள்ளன.

உலகப் புகழ்பெற்ற ஓஷோ 1990ஆம் ஆண்டு ஜனவரி 19ஆம் நாள் மறைந்தார்.

இலண்டனிலிருந்து வெளிவரும் 'சண்டே டைம்ஸ்' என்னும் இதழ், ''இருபதாம் நூற்றாண்டை உருவாக்கிய ஆயிரம் சிற்பிகளில் ஒருவர் ஓஷோ'' என்று புகழ்ந்துள்ளது.

''இந்திய தேசத்தின் தலைவிதியை மாற்றிய மாமனிதர்கள் பத்துபேரில் ஓஷோவும் ஒருவர்'' என்று 'சண்டே மிட்-டே' என்ற இந்திய இதழும் ஓஷோவைப் புகழ்ந்துள்ளது.



# ஓஷோ

## சிந்தனைகளும் வரலாறும்

தமிழ்ப்பிரியன்

இது ஒரு
கற்பகம் புத்தகாலயம்
வெளியீடு

KR 540